# தமிழ் நாட்டு வட எல்லை

ஆசிரியர் :

மா. இராசமாணிக்கம், B. O. L., L. T., M. O. L.

விவேகானந்தர் கல்லூரி, சென்னை.



எடுகேஷனல் பப்ளிஷிங் கம்பெனி,

நுங்கம்பாக்கம் :: சென்னை—6

 1948 [விலை ரூ. 1—4—0

# முகவுரை

தமிழ் நாட்டு வட எல்லை எனப் பெயர்கொண்டு வெளி வரும் இந்நூல் இலக்கியம் - வரலாறு - கல்வெட்டுகள் என்பவற்றைத் துணையாகக் கொண்டு ஆராய்ந்து எழுதப் பெற்றதாகும். சங்ககாலப்புலவர் முதல் கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த படிக்காசுப் புலவர் ஈறாக எல்லாத் தமிழ்ப் புலவரும் 17-ஆம் நூற்றாண்டில் தோன்றிய வட மொழிப் புலவரும் வேங்கடமே தமிழக வட எல்லை என்பதை வற்புறுத்திச் சென்றனர். வரலாறும் கல்வெட்டுகளும் வடபெண்ணை யாறும் தமிழகத்தின் வட எல்லை என்பதை வலியுறுத்துகின்றன. சித்தூர்-தென் நெல்லூர் ஜில்லாக்கள் தொண்டை நாட்டின் பகுதிகளே என்பதை அவ்விரு ஜில்லாக்களிலும் உள்ள கல்வெட்டுகள் மெய்ப்பிக்கின்றன.

இந்த உண்மைகளைத் தமிழரும் தெலுங்கரும் உணர்ந்து - மண்ணாசை மறந்து - நேர்மையான முறையில் அமைதியும் அறமும் துணைசெய்யத் தமிழ் நாட்டின் இரு கண்களாகிய திருவேங்கடம் - திருக்காளத்தி ஆகிய இரண்டையும் தன் அகத்தே பெறும் தமிழ் மாகாணத்தைப் பிரிக்க நன்முறையில் முயலவேண்டும் என்பதைக் குறிப்பதே இவ்வாராய்ச்சி நூலின் நோக்கமாகும்.

சேக்கிழார் அகம்,
சென்னை.

மா. இராசமாணிக்கம்

## உள்ளுறை

| எண் | பொருள் | பக்கம் |
| --- | --- | --- |
| 1. | சங்க காலத்தில் வட எல்லை .... | 1 |
| 2. | சங்க நூல்களில் வேங்கடம் .... | 12 |
| 3. | பல்லவர் காலத்தில் வட எல்லை .... | 25 |
| 4. | சோழர் காலத்தில் வட எல்லை .... | 39 |
| 5. | பாண்டியர் - ஹொய்சளர் காலத்தில் வட எல்லை .... .... | 59 |
| 6. | விஜயநகர ஆட்சியில் வேங்கடம் .... | 62 |
| 7. | சென்னை நகரம் .... .... | 83 |
| 8. | தமிழர் கடமை .... .... | 89 |
|  | பிற்சேர்க்கை .... .... | 95 |
|  | எடுத்தாளப் பெற்ற நூல்களும் பிறவும் | 97 |

# தமிழ் நாட்டு வட எல்லை

## I. சங்க காலத்தில் வட எல்லை

### தொல்காப்பியம்

இப்பொழுதுள்ள தொல்காப்பியம் முதலிய சங்க நூல்களின் பரந்துபட்ட காலம் ஏறத்தாழக் கி. மு. 4-ஆம் நூற்றாண்டிலிருந்து கி. பி. 3-ஆம் நூற்றாண்டு வரை என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். சங்க நூல்களுள் தொல்காப்பியம் பழமையானது என்பது பலர் கருத்து. அதன் குறைந்த கால அளவு ஏறத்தாழக் கி. மு. 4-ஆம் நூற்றாண்டாகலாம் என்பது அறிஞர் கருத்து. *

அக்காலப் புலவரான பனம்பாரனார் தொல்காப்பியப் பாயிரத்தில்,

" வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகம் "

என்று குறித்துள்ளார். எனவே, அவர் காலத்தில் வேங்கடமே தமிழகத்தின் வட எல்லையாக இருந்தது என்பது தெளிவு.

### பெருங் காக்கைபாடினியம்

தமிழில் யாப்பிலக்கண நூல் செய்த பெருங் காக்கை பாடினியர் என்ற பெண்பாற் புலவர் தொல்காப்

* R. Raghava Aiyangar's Tamil Varalaru. (Annamalai University Publication).

# சங்ககாலத் தமிழகம்
## (கி.மு. – கி.பி. 300)



பியர் காலத்தவர். அவர் தாம் செய்த யாப்பிலக்கண நூலில் தமிழக எல்லைகளைக் குறித்துள்ளார். அச்செய்யுளில்,

> " வடக்கும் தெற்கும் குணக்கும் குடக்கும்
> வேங்கடம் குமரி தீம்புனற் பௌவமென்(று)
> இந்நான் கெல்லை அகவயிற் கிடந்த
> நூலதின் உண்மை வாலிதின் விரிப்பின்..."

என்னும் அடிகளை நோக்குக. அங்கும் வேங்கடமே வட எல்லையாகக் குறிக்கப்பட்டமை காண்க.

குமரியாறு தென் எல்லையாக இருந்த காலத்தவரான சிகண்டியார் என்ற இசை நூற் புலவர்,

> " வேங்கடம் குமரித் தீம்புனல் பௌவமென்
> றிந்நான் கெல்லை தமிழது வழக்கே "

என்று குறித்தனர். இதனால் இயற்றமிழ் வழக்கிற்கு ஒப்ப இசைத்தமிழ் வழக்கினும் இவ்வெல்லைகளே குறிக்கப்பட்டமை காண்க.

சிறு காக்கைபாடினியம்

இஃதொரு யாப்பிலக்கண நூல். இதனைச் செய்தவர் பெண்பாற் புலவர். அவர் தொல்காப்பியர் காலத்துக்குப் பிற்பட்டவர்; குமரியாறு கடல் கொள்ளப்பட்டபின் நூல் பாடியவர்; அதனால் தமது நூலில் தமிழகத்துத் தென் எல்லை கூறும் பொழுது குமரியாற்றைக் கூறாது கடலை எல்லையாகக் கூறுகிறார்.

> " வடதிசை மருங்கில் வடுகு வரம்பாகத்
> தென்திசை உள்ளிட் டெஞ்சிய மூன்றும்...கடல் " 1

என்று கூறியுள்ளதைக் காண்க. இங்கு வட எல்லை

1. தொல்காப்பியம், செய்யுளியல், சூ. 1-உரை.

'வேங்கடம்' என்று திட்டமாகக் கூறாமல், 'வடுகு' எனக் கூறியிருத்தல் நோக்கத்தக்கது.

"வேங்கடத் தும்பர்...வடுகர் தேஎத்து" [2]

என்று பழம்புலவர் அடிக்கடி கூறி வந்ததால், வேங்கடத்திற்கு அப்பாற்பட்ட நாட்டு மொழியைத் தான் 'வடுகு' என்பது குறிக்கிறது என்பது பெறப்படும். எனவே, தொல்காப்பியர்க்குப் பிற்பட்ட காலத்திலும் வேங்கடமே வட எல்லையாக இருந்தது எனக் கொள்ளலாம்.

சிலப்பதிகாரத்தில்,

"நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நாடு" [3]

என்பது காணப்படுகிறது. இந்நூலின் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டென்பர். (சிலர் கி. பி. 5-ஆம் நூற்றாண்டு என்பர். எதுவாயினும் சரி;) அக் காலத்தில் தமிழகத்தின் வட எல்லை வேங்கடம் என்பது தெளிவு.

## அசோகன் காலத்தில் வட எல்லை

அசோகன் இந்தியாவின் பெரும்பகுதியை ஆண்ட முதல் பேரரசன். அவனுக்கு முன்னும் பின்னும் அந்த அளவுள்ள பெருநாட்டை ஆண்ட பேரரசர் இல்லை. அவன் காலம் கி. மு. 272—232 ஆகும். அவனது ஆட்சியைக் குறிக்கும் இந்தியப் படத்தை நோக்குக.[4] வட பெண்ணையாறே அவனது பெருநாட்டின் தென் எல்லையாக இருந்தது.* அப்பேரரசன் தன் பெரு நாட்டில் பல கற்றூண்களை நாட்டி அவற்றில் பௌத்த தருமக் கொள்கைகளைப்

2. அகம் - 213. 3. வேனிற்காதை, வரி, 1—2.
4. V. A. Smith's Asoka, Map. * p. 80.

பொறித்தான். அவற்றுள் இரண்டு தூண்களில் தமிழ கத்தைப் பற்றிக் குறிக்கிறான்.

> "என் நண்பர்களான சேர - சோழ - பாண்டிய - சத்திய புத்திரர் நாகுகட்டும் பௌத்த பிரசாரகரை அனுப்பி யுள்ளேன்" 5

என்பது அவன் குறிப்பின் சுருக்கம்.

சேர - சோழ - பாண்டிய நாடுகளின் பரப்பு அனைவரும் அறிந்ததே. 'அசோகன் குறித்த சத்திய புத்திரர் யார்?' என்பது கேள்வி. அவர்கள் சேலம் - சத்திய மங்கலப் பகுதியை ஆண்டவர்கள் என்பது புகழ்பெற்ற வரலாற்று ஆசிரியர் கருத்து. 6 அசோகன் தனது பெருநாட்டுத் தென் எல்லைக்கு அப்பால் இந்த நால்வரைத் தவிர வேறு எவரையும் குறிக்கவில்லை என்பது நோக்கத்தக்கது. எனவே, சத்தியபுத்திரர் கொங்குநாட்டிலும் சேரர் சேரநாட்டிலும் பாண்டியர் பாண்டிய நாட்டிலும் சோழர் சோழ நாட்டிலும் இருந்தனராதல் வேண்டும். தொண்டை நாட்டைச் சோழரோ - பிறரோ ஆண்டனர் என்று கொள்ளலாம். தொண்டை நாட்டில் பலம் பொருந்திய அரசர் ஆட்சி இல்லை எனின், அந்நாடு அசோகன் பெருநாட்டிற்கு இரையாகி இருக்கும் அல்லவா? எனவே, வடபெண்ணையாற்றுக்கு இப்பாற்பட்ட அருவா நாடு (தொண்டை நாடு) வன்மையுள்ள சோழ அரசர் ஆட்சியில் இருந்ததென்று ஸ்மித் கருதுவது பொருத்தமாகும். 7

---

5. Rock Edicts 2 and 13.
6. V. A. Smith - Asoka, p. 161.
7. Vide his Early History of India, pp. 163, 185, 446.

"According to the most generally received traditions, the chola country (cholamandalam) was bounded on the

தொண்டை நாடு

தொண்டை நாடு என்பது வட பெண்ணைக்கும் தென் பெண்ணைக்கும் இடைப்பட்ட நிலப்பகுதியாகும்.[8] ‘கரிகாலன் தொண்டை நாட்டில் காடு கெடுத்து நாடாக்கினான்’ என்று தமிழ் நூல்கள் கூறுதலால், தொண்டை நாட்டுப் பெரும் பகுதி காடாகவே இருந்தது என்று கொள்ளலாம். வேற்காடு, ஆர்க்காடு, ஆலங்காடு முதலிய பெயர்களும் இன்றுள்ள காடுகளும் மலைகளுமே இந்த உண்மைக்குப் போதிய சான்றாகும். அந்நாட்டில் முதலில் ஆடுமாடுகளை மேய்த்துக்கொண்டு குறும்பர் என்னும் இனத்தவர் இருந்தனர். அவர்கள் தொண்டை நாட்டை இருபத்து நான்கு கோட்டங்களாக வகுத்து வாழ்ந்து வந்தனர் என்பது பழைய வரலாறு. சோழ நாட்டுப்

---

north by the Pennar, and on the south by the Southern Vellaru river; or, in other words, it extended along the eastern, or Coromandel, coast from Nellore to Pudukkottai, where it abutted on the Pandya territory."—p. 446.

8. " ............ the River South Pennar where began the division known as Aruvanadu, which extended northwards along the coast of almost as far as *Northern Pennar. This constituted the Tondaimandalam* a division occupied by Tondayar and belonging to them ........... this extended vaguely northwards as far as Tiruppati, which seems to have marked off the northern boundary, which sometimes extended farther northwards quite up to the northern borders of the Pulicat lake the region round kalahasti on one side of it at any rate, being borne in the old accounts even now as Tondaiman Magani."—Dr. S. K. Aiyangar's Int. to the Pallavas of Kanchi, P. 2.


கரிகாலன் பெருநாடு
(கி.மு. 60 – கி.மு. 10)
கிருஷ்ணை
வடபெண்ணை
காஞ்சி
மகாபலிபுரம்
பாலாறு
தென்பெண்ணை
காவிரி
கரூர்
புகார்நகரம்
வெண்ணி
நாகப்பட்டினம்
கோட்டைக்கரை
உறையூர்
தொண்டி
வஞ்சி
மதுரை
பாண்டி
நாடு
கொற்கை
இலங்கை

பிரிவினைகளில் 'கோட்டம்' என்ற சொல்லே இல்லை; பின்வந்த பல்லவரும் அவற்றைப் புதியனவாக உண்டாக்கியதற்குச் சான்றில்லை. ஆதலால், சோழர் ஆட்சி தொண்டைமண்டலத்தில் ஏற்படுவதற்கு முன்னரே அந்தப் பிரிவினைகள் இருந்திருத்தல் வேண்டும் என்று கொள்வது தவறாகாது. அந்தப் பிரிவினைகள் யாவை?

### இருபத்து நான்கு கோட்டங்கள்

1. புழல் கோட்டம், 2. ஈக்காட்டுக் கோட்டம், 3. மணவிற் கோட்டம், 4. செங்காட்டுக் கோட்டம், 5. பையூர்க் கோட்டம், 6. எயில் கோட்டம், 7. தாமல் கோட்டம், 8. ஊற்றுக்காட்டுக் கோட்டம், 9. களத்தூர்க் கோட்டம், 10. செம்பூர்க் கோட்டம், 11. ஆம்பூர்க் கோட்டம், 12. வெண்குன்றக் கோட்டம், 13. பல்குன்றக் கோட்டம், 14. இளங்காட்டுக் கோட்டம், 15. காலியூர்க் கோட்டம், 16. செங்கரைக் கோட்டம், 17. பழுவூர்க் கோட்டம், 18. கடிகூர்க் கோட்டம், 19. செந்திருக்கைக் கோட்டம், 20. குன்றவர்த்தனக் கோட்டம், 21. வேங்கடக் கோட்டம், 22. சேத்தூர்க் கோட்டம், 23. வேலூர்க் கோட்டம், 24. புலியூர்க் கோட்டம்.

தொண்டைநாடு சங்ககாலத்தில் 'அருவா நாடு' என்றே வழங்கப்பட்டது. அஃது 'அருவா வடதலை' என்றும் 'அருவா நாடு' என்றும் இரண்டாகப் பேசப்பட்டது. அருவா நாட்டு மக்கள் 'அருவாளர்'[9] எனப்பட்டனர். பரந்துபட்ட சங்ககாலத்தின் ஒரு காலப் பகுதியில் 'திரையர்' என்பவர் அந்நாட்டை ஆண்டனர் என்பது பழம் பாடல்களால் தெரிகிறது.

---

9. 'தொல் அருவாளர் தொழில் கேட்ப'-பட்டினப்பாலை, அடி. 275

"செல்லா நல்லிசைப் பொலம்பூண் திரையன்
பல்பூங் கானல் பவத்திரி அன்ன"[10]

"வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை"[11]

"வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்
இனமழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்
டோங்குவெள் ளருவி வேங்கடத் தும்பர்"[12]

என வரும் குறிப்புகளை நோக்க, திரையன் என்பவன் தொண்டையன் எனவும் பெயர்பெற்றிருந்தான் என்பதும், அவனுக்கு வேங்கடம் உரியது என்பதும், அவன் தலை நகரம் பவத்திரி (பவ்வத்திரி) ஆகலாம் என்பதும் அறியப் படும். பவத்திரி என்பது இன்றைய நெல்லூர் ஜில்லாவில், கூடூர்த் தாலூகாவில் உள்ள ரெட்டிபாளையம்[13] என்பதே ஆகும்.

காஞ்சியைத் தலை நகராகக் கொண்ட (தென்) தொண்டை நாட்டைத் தொண்டைமான் - இளந்திரையன் என்பவன் அரசாண்டு வந்தான் என்பது பெரும்பாண் ஆற்றுப்படையில் குறிக்கப்பட்டுள்ளது. இவ்விரண்டு உண்மைகளையும் ஒரு சேர நோக்க, வட தொண்டை நாட்டைப் பவத்திரியிலிருந்து தொண்டைமான் - திரைய னும் தென் தொண்டை நாட்டைக் காஞ்சியிலிருந்து தொண்டைமான் - இளந்திரையனும் ஆண்டுவந்தனர் என் பது தெள்ளிதிற் புலனாகும். இளந்திரையன் சிறந்த தமிழ்ப் புலவன்.[14]

அருவா நாடு என்பதில் இருந்த மக்கள் 'அருவாளர்'[15], எனப்பட்டனர். அவரே 'தொண்டையர்' என்றும்

10. அகம் - 340. 11. அகம் - 85. 12. அகம் - 213.

13. Nellore Ins. Vol. I, Gudur - Nos. 86 - 105.

14. புறம் - 185.

15. 'அருவாளர்' என்னும் பெயரே, தொண்டை நாட்டுக்கு வடக்கே இருந்த தெலுங்கரால் 'அரவாளர்', 'அரவவாளு'

பழம் பாடல்களில் குறிக்கப்பட்டனர். அவரது அரசன் 'தொண்டையர்கோன்,' 'தொண்டைமான்,' என்று பெயர் பெற்றான்; நாடும் 'தொண்டை நாடு' எனப்பெயர் பெற்றது.

சங்ககாலத்தில் தொண்டைமான் - திரையன், தொண்டைமான் - இளந்திரையன் என்பவர் வாழ்ந்தனராகக் கண்டோம். இவர்களைத் தவிர வேறொரு தொண்டைமான், அதியமான்-அஞ்சி என்பவன் காலத்தில் காஞ்சியிலிருந்து அரசாண்டான். அவனிடம் ஔவையார் அதியமான் சார்பாகத் தூது சென்று வந்தார்[16]. வேங்கடத்தை அடுத்துள்ள நாராயணவனம்[17] என்னும் இடத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த தொண்டைமான் வேங்கட மலைமீது பெருமாள் கோவிலைக் கட்டினவன் என்று திருப்பதி பற்றிய ஸ்தல நூல்கள் கூறுகின்றன. அவன் காலம் ஏறத்தாழக் கி. மு. அல்லது கி. பி. முதல் நூற்றாண்டாகலாம்.[18] காளத்திக்கு அண்மையில் 'தொண்டைமான் நாடு' என்னும் ஊர் இருக்கின்றது; 'தொண்டை

---

என்று நாளடைவில் தமிழர் அனைவரையும் குறிக்கப் பயன்பட்டது; அருவாளர் மொழி 'அருவம்', 'அரவம்' எனப்பட்டது. இந்த உண்மையைக் கொண்டும் தொண்டை நாடு முழுவதும் தமிழகம் என்தை அறியலாம்.

16. புறம்-95. 17. நாராயணவனம் என்பது பழைய காலத்தில் நாராயணபுரம் எனப்பட்டது. அங்கு முதலாம் இராஜராஜன் முதலியோர் கல்வெட்டுகளைக்கொண்ட சிவன் கோவிலும் பெருமாள் கோவிலும் இருக்கின்றன. பெருமாள் பெயர் - கல்யாண வேங்கடேசுவரர்; சிவன் பெயர் - அம்ப (அப்பு)லிங்கமுடைய நாயனார். நாராயணபுரம், 'ஜயங்கொண்ட சோழ மண்டலத்து-குன்றவர்த்தனக் கோட்டத்து - திருவட்டியூர் நாட்டு - நாராயணபுரம்' எனப்பட்டது - A. R. E. 1912, Nos. 373 - 382.
18. History of Tiruppati, Vol. I, p. 203.

மான் ஆற்றூர்' என்பதும் அது. அது பொன்முகலி ஆற்றங்கரையில் அமைந்துள்ளது[19].

வேங்கட மலைப்பகுதி தொண்டைமான் - திரையனுக்கு உரியதாக இருந்த பொழுதிலும் அப்பகுதிக்குத் தலைவனாகத் (திரையனுக்கு அடங்கி?) இருந்தவன் புல்லி என்ற களவர் (கள்வர்) கோமான் ஆவன். அவன் சிறப்பை விளக்கும் பல பாடல்கள் சங்க நூல்களில் காணப்படுகின்றன. எனவே, தொண்டை நாடு சிற்றரசர் பலரது ஆட்சியில் இருந்தது - ஆயினும் சங்ககாலப் பகுதியில் திரையர் பேரரசு செலுத்தினர் என்பன அறியலாம்.

மணிமேகலை வர்ழ்ந்த காலத்தில் தொண்டை நாடு சோழர் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. கிள்ளி என்பவன் பேரரசனாகவும் இளங்கிள்ளி என்பவன் அவன் பிரதிநிதியாகக் காஞ்சியிலிருந்து தொண்டை நாட்டை ஆண்டதாகவும் அறிகின்றோம். மணிமேகலை காலம் எதுவாயினும் ஆகுக. தொண்டை நாடு பல்லவர் என்னும் புதிய மரபினர் ஆட்சிக்கு (ஏறைக் குறையக் கி. பி. 300-ல்) மாறிவிட்டது.

---

19. Nellore Ins. Vol. III, Venkatagiri Ins. No. 6, 286 of 1296, 230 of 1903.

# II. சங்க நூல்களில் வேங்கடம்

சென்ற பகுதியில் வேங்கடம் தமிழகத்தின் வட எல்லை என்பதையும் அதனைத் தன் அகத்தே பெற்ற தொண்டை நாடு தமிழ் நாடு என்பதையும் சங்கநூற் சான்றுகளும் பிறவும் கொண்டு தெளிந்தோம். இங்கு வேங்கடத்தைப் பற்றி வந்துள்ள பழைய நூற் குறிப்பு களைக் காண்போம்.

## வேங்கடத்தைக் குறித்த சங்ககாலப் புலவர்

வேங்கடத்தைப் பற்றி அறிந்த புலவர் சிலர் இருந் திருக்கின்றனர் என்பது, அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை முதலிய நூல்களால் அறியலாம். இவருள் மாமூலனார், கல்லாடனார், மதுரைக் கணக் காயனார், அவர் மகனார் நக்கீரனார், காட்டூர் கிழார் மகனார் கண்ணனார், தாயன் - கண்ணனார், நன்னாகனார், கள்ளில் - ஆத்திரையனார் என்பவர் குறிப் பிடத் தக்கவர். இப்புலவருள் கல்லாடரும் மாமூல னாரும் பாடியனவே பலவாகும். இவர் இருவரும் சிறந்த நண்பர் என்பது "கல்லாட மாமூலனார்"[1] என்னும் தொடரால் அறியலாம்.

## மாமூலனாரும் வேங்கடமும்

(1) வேங்கடம் திருவிழா மிக்குடையது. அது புல்லி என்பான் நாட்டகத்தது. புல்லி கள்வர் தலைவன்; அக் கள்வர் வில்லைக் கையில் ஏந்தி யானை வேட்டை ஆடுபவர். அவர் யானைக் கொம்புகளைக் கொண்டுவந்து கள்விலை பகரும் பேரில்லங்களில் கள்ளாட்டு அயர்வர். இத்தகைய

1. 'கபிலபரணர்' என்றாற்போல.

கள்வர்க்குத் தலைவனான புல்லி, மழவர் நாட்டினை அடிப்படுத்தினவன்; சிறந்த கொடையாளி.

* * *

" கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம்* வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம்."[2]

(2) வேங்கடமலையில் வெண்கடம்ப மரங்கள் மிகுதி. அவற்றின் பூக்கள் வெண்மையான சுண்ணச்சாந்து விரிந்தாற்போன்ற தோற்றத்தை அளிக்கும். வேங்கடமலையில் திண்ணிய கொம்புகளையும் பறைபோன்ற உள்ளடிகளையும் உடைய களிறுகள் மிகுதி. அவை தம் உடம்புத் தினவு அகற்றக் கடம்ப மரங்கள்மீது உராயும். அப்பொழுது பனித்துளிகள் சிதறிக் காற்றிற் பறந்து சென்று உழவர் வெண்ணெல் வித்தின பாறைமீது படியும். இத்தகைய பனி உண்டாகும் சோலையை உடைய வேங்கடமலைக்கு அப்பால் மொழி வேறுபட்ட நாட்டினர் இருந்தனர்.

* * *

" பனிபடு சோலை வேங்கடத் தும்பர்
மொழிபெயர் தேஎத்தர்."[3]

(3) வேங்கடமலையில் வேட்டுவர் பலர். அவர்கள் வலிய வில்லினையும் கொடும் பார்வையையும் உடையவர்; அவர்கள் மானைப் பிடித்து அதன் கொழுப்புப் பொருந்திய தசையை நெருப்பில் வைத்து வதக்கித் தின்பர்; குற்றமற விளைந்த நெல்லாற் செய்யப்பட்ட கள்ளினைக் குடித்து மயங்குவர்; புலால் படிந்த கைகளை உடையவர்; கழுவாத வாயை உடையவர்; ஓயாது ஆரற்றுகின்ற தொண்

---

* 'மழபுலம்' என்பது சோழநாட்டுக் காவிரியாற்றின் வடகரை நாட்டுக் கொல்லிக் குடவரைவரை பரந்திருந்த நாடு.

2. அகம் - 61. 3. அகம் - 211.

டையையுடைய பெருங்கோட்டான் ஒடுங்கும் கடப்ப மரங்களையுடைய சிற்றூர்களில் வாழ்பவர்; சிவந்த புள்ளிகளையுடைய நெற்றி யானைகள் மிகுந்தது வேங்கட மலை.[4]

(4) பருத்த தோள்களையும் நீண்ட செவிகளையும் உடைய குடபுலத் தாய்மார் வரகரிசியைப் பூணிட்ட உலக்கையால் துவைத்து உரல் துளை நிறைய வைத்த குவியலை அவ்விடத்துச் சுனை நீருடன் முகந்து கொணர்ந்து கழிபட்ட மட்பாண்டத்தில் கல் அடுப்பில் ஏற்றிக் கடுக்கை மரத்துத் தேனினால் சமைப்பர். அச்சோற்றை நல்ல ஆனின் பாலோடு பிறர்க்கும் பகுத்துக் கொடுப்பவன் வேங்கடமலைத் தலைவனான புல்லி.[5]

(5) உமணர் (உப்பு விற்பவர்) பருக்கைக் கற்கள் நிரம்பிய வழிகளையுடைய கானத்தைக் கடந்து கடல் நீரால் அமைந்த உப்புத்திரளைக் கொண்டு செல்வர்; வழி வருத்தமுற்ற எருதுகள் இளைப்பாறக் கல்திரளை இடித்து உண்டாக்கிய கிணறுகளண்டை நீருருந்தி இருப்பர். இத் தகையது புல்லி என்பானது குன்றம் (வேங்கடம்). அக் குன்றத்தில் உள்ள நடத்தற்கரிய காட்டினின்றும் நீங்கினால் அப்பாற்பட்டது, வில்லும் அம்பும் ஏந்திய வடுகர் இருலினின்றும் பிழிந்த தேனைப் பருகுதலால் களிப்பு மிகுந்து ஆரவாரம் செய்யும் மொழி வேறுபட்ட நாடு.

> "புடையலங் கழற்கால் புல்லி குன்றத்து
> நடையருங் கானம் விலங்கி நோன்சிலை
> தொடையமை பகழித் துவன்றுநிலை வடுகர்
> பிழியார் மகிழர் கலிசிறந் தார்க்கு
> மொழிபெயர் தேஎயம்."[6]

4. அகம் - 265. 5. அகம் - 393. 6. அகம் - 295.

(6) புல்லியது நன்னாட்டில் (வேங்கடப் பகுதி) மழை வளம் மாறும் பொழுது இடைக்குல மக்கள் வழிப்போக்கரது பசியைப் போக்க இளைய கிடாய்களின் கழுத்தில் பூட்டியுள்ள மூங்கில் குழாயில் அடைத்த தீம்புளி உணவைப் பசியால் நேர்ந்த காதடைப்பு நீங்கும்படி தேக்கிலைகளில் பகிர்ந்து கொடுக்கும் இயல்புடையவர். இத்தகையவர் வாழும் புல்லி நன்னாட்டிற்குப் புறம்பே நடத்தற்கு அரிய சுரம் இருக்கிறது.[7]

(7) புல்லியினது மலையில் பெரிய தாள்களையுடைய ஆண்யானைகள் வரையணங்குகள் பயிலும் மலைப்பக்கத்தே மழை ஒலியோடு மாறுபட முழக்கம் செய்யும். புல்லி பொய்த்தல் இல்லாத நல்ல புகழை உடையவன்; பெரிய வண்மையை உடையவன். அவனது மலைவழி மயங்கிக் காணலுறுவது.[8]

இதுகாறும் குறித்த குறிப்புகளைக் காண, மாமூலனார் என்ற பைந்தமிழ்ப் புலவர், 1. வேங்கடமலைப் பகுதியையும் வேங்கடக் கோட்டத்தையும் நன்கு அறிந்தவர்; 2. வேங்கட மலைவளம், அரிய கல்வழி, மலைபடு பொருள்கள் முதலியவற்றை நன்கு தெளிந்தவர்; 3. வேங்கடத்தில் திருவிழாக்கள் மிகுதி என்பதை அறிந்தவர்; 4. வேங்கடப் பகுதியை ஆண்ட புல்லி என்பவன் வீரத்தையும் வண்மையையும் நன்கு தெரிந்தவர்; 5. கள்வர் எனப்பட்ட வேட்டுவர் இயல்பினை அறிந்தவர் என்பன நன்கு அறியக் கிடக்கின்றன. இவற்றிற்கு மேலாக— 'வேங்கட மலைத் தொடர்க்கு அப்பால் (வடக்கே) மொழி வேறு படுகிறது' என்று அவர் குறித்திருப்பதும், அவ்வேறு பாட்டுப் பகுதியில் வாழ்ந்தவர் 'வடுகர்' என்பதும்

---

7. அகம் - 311. 8. அகம் - 359.

நமக்குத் தேவையானவை. இனிக் கல்லாடனார் வேங்கடம் பற்றிக் கூறியிருப்பன காண்போம்.

கல்லாடனாரும் வேங்கடமும்

(1) வேங்கட மலையில் உள்ள இளையர் (வேடர்) வலமாக வளைந்த வெண்கடப்ப மரத்தினது காடு முழுவதும் மணம் நாறும் நாள் மலர்களைச் சுரித்த தலையாட்டம் போல் நான்ற தம் தலையில் விளங்க அணிந்து கொள்வர்; உரல் போன்ற அடியினையுடைய இளைய பெண் யானை காட்டில் அலறும்படி அதன் களிற்றுக் கன்றினை அகற்றிக் கைப்பற்றிக் கொள்வர்; மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்துகொண்டு கரிய தாளையுடைய கடப்ப மரத்தின் செழித்த கிளை ஒன்றினைப் பிளந்து பெரிதாக வுரித்த வெண்மையான நாரினாலே அழுந்தப் பிணித்துக்கொண்டு செல்வர்; பெருங் கொடிகள் காற்றால் மடங்கும் தெருவினையுடைய பழைய வூர்களில் கள் விலையாகப் பேரில்லங்களின் வாயிலிடங்களிற் பிணித்துச் செல்வர். இவ்வேடர்கட்குத் தலைவன் புல்லி. அவனது நாடு அகன்ற இடத்தையுடைய வேங்கட நாடு.

> "கல்லா இளையர் பெருமகன் புல்லி
> வியன்றலை நன்னாட்டு வேங்கடம்."[9]

(2) வேங்கடம் யானைகளை மிகப் பலவாக உடையது. அதன் தலைவன் வீரம் மிகுந்த போர்த்திறன் உடைய வணங்கிய புல்லி.

> "மாஅல் யானை மறப்போர்ப் புல்லி
> காம்புடை நெடுவரை வேங்கடத் தும்பர்..."[10]

(3) எனது வறுமையைத் தொலைத்த அம்பர் கிழவன்[11]

9. அகம் - 83. 10. அகம் - 209. 11. அம்பர் - திருவம்பர் என்னும் பாடல் பெற்ற ஸ்தலம்; சோழ நாட்டது.

—அருவந்தை என்பவன், புல்லியினது வேங்கடமாகிய பெரிய மலையினிடத்துப் பெய்த மிக்க மழைத்துளியினும் பல நெடிய காலம் வாழ்வானாக.[12]

(4) வேங்கடமலை எல்லைப் புறத்ததாகிய வடபால் நிலத்தில் பஞ்சம் உண்டாகியது. அதனால் அங்கிருந்து தெற்கே வந்து தங்கிய என் சுற்றத்தவர் மகிழ........

" வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென
ஈங்குவந் திறுத்தஎன் இரும்பே ரொக்கல். "[13]

இக்குறிப்புக் கவனித்தற் குரியது. இக்குறிப்பினால் இக்கல்லாடர் என்னும் புலவர் வேங்கட மலை நாட்டினர் என்பதும், அங்கு ஒரு காலத்துப் பஞ்சம் நேர்ந்தமையிற் சோணாட்டு வள்ளல்களை அடைந்து பாடிச் சிறப்புற்றார் என்பதும் அறியக் கிடக்கின்றன. மாமூலனாரும் இவரைப் போல வேங்கட வரையினைப் பலபடப் பாடியுள்ளமை யாலும் முன்னர்க் கூறியவாறு இக்கல்லாடரோடு மிக்க நட்புரிமை உடையராதலாலும் அந் நாட்டினர் எனக் கொள்ளலாம்.[14]

புலவர் பிறரும் வேங்கடமும்

(1) கண்ணனார் என்ற புலவர் ஒரு பாடலில் வேங்கடத்தைப் பற்றிக் கூறியுள்ளார்: " வேங்கட மலைச் சாரலில் பெண் யானை கன்றினை ஈனும். அதற்கும் கன்றுக்கும் இரை வேண்டி ஆண்யானை, முற்றாத மூங்கிலின் முளையைக் கொண்டுவந்து அவற்றை உண்பிக்கும். இத்தகைய நிகழ்ச்சி நடைபெறும் வேங்கட நெடுவரை வெல்லும் வேல்வலமுடைய திரையன் என்பானுடையது. "

---

12. புறம் - 385. 13. புறம் - 391.

14. J. of S.V.O I. " வடவேங்கடமும் வண்டமிழும்,' P. 47.

" * * * சாரல்
ஈன்றுநாள் உலந்த மென்னடை மடப்பிடி
கன்றுபசி களைஇய பைங்கண் யானை
முற்றா மூங்கில் முளைதரு பூட்டும்
வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை ". [15]

(2) "வேங்கடம் ஏறுதற்கரிய கோடுகளை உடையது; உயர்ந்த வெள்ளிய நீர் அருவிகளை உடையது. அது தொண்டையர்க்கு உரியது. அவர்கள் வினையிடத்து ஆற்றல்புரிகின்ற யானைப் படையை உடையவர். அந்த வேங்கடத்துக்கு அப்பால் இருப்பது வடுகரது நாடு," என்பது தாயங்கண்ணனார் என்ற புலவர் தரும் குறிப்பாகும்.

வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்
இனமழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்(டு)
ஓங்குவெள் ளருவி வேங்கடத் தும்பர்
* * * *
* * வடுகர் தேஎத்து". [16]

இது மிகவும் முக்கியமான குறிப்பு. 'வேங்கடத்துக்கு அப்பாற்றான் வடுகர் நாடு' என்று சங்க காலப் புலவர் குறித்திருத்தல் காண்க. எனவே, வேங்கடமலை உள்ளிட்ட தென்பாற்பட்ட பகுதி தமிழகம் என்பது கூறாமே அமையுமன்றோ! வேங்கட வரைப்புலம் தொண்டையரது என்பதும் காண்க. 'தொண்டைமான்—இளந்திரையன்' எனவரும் அரசன் பெயரைக் காண—அவன் 'தொண்டையோர் மருக!' † என்று பாராட்டப் படுதலையும் காண—'தொண்டையர்' என்பவரும் 'திரையர்' என்பவரும் ஒரு சார் அரசரே எனக் கொள்ளலாம். 'திரையன் வேங்கடம்' என்று கண்ணனார் சொன்னதும்,

15. அகம்—85. 16. அகம்—213.
† பெரும்பாண் ஆற்றுப்படை, 454.

"தொண்டையர் வேங்கடம்" என்று தாயன் கண்ணனார் கூறியதும் ஒரு பொருள் குறித்ததே எனலாம்.*

(3) மதுரைக் கணக்காயனார் என்ற பாண்டிய நாட்டுப் புலவர் வேங்கடம் பற்றிக் கூறியுள்ளது இது: "வடக்கே யுள்ள வேங்கடம் பயந்த வெண்கோட்டு யானைகளை மறப் போரினைச் செய்யும் பாண்டியர் உடையர்."

" * * * வடவயின்
வேங்கடம் பயந்த வெண்கோட் டியானை
மறப்போர்ப் பாண்டியர்...". 17

இவ்வரிய குறிப்பினாலும், 'வேங்கடம் பயந்த'-'அங்குள்ள அரசர் திறையிட்ட' என்னும் குறிப்புரையாலும் பாராட்டப் பட்ட சங்க காலத்தில் ஒரு பொழுது வடவேங்கடப் பகுதி பாண்டியர் உயர்வை ஒப்புக் கொண்டிருந்த தென் பது விளங்குகிறது. அதனாற் போலும், பின்வந்த பாண் டியன் - நெடுஞ்செழியன் தமிழக எல்லைப் புறத்தில் பூசல் விளைத்துக்கொண்டிருந்த ஆரியரை வென்று, 'ஆரி யப்படை கடந்த நெடுஞ்செழியன்' என்று பாராட்டப் பட்டான்! மற்றொரு நெடுஞ்செழியன், "தென் குமரி வடவேங்கடம் உள்ளிட்ட தமிழகத்தின் தலைவா!" என்று மாங்குடி மருதனாரால் ஏத்தெடுக்கப் பெற்றான்! 18

(4) "வேங்கட மலையில் வேங்கை மரங்கள் பல. அவற் றின் பூக்கள் புலி நிறம் உடையவை. அவற்றினிடையே பெருத்த கொம்புகளையுடைய நாரத்தையின் மணம் மிகுந்த மலர்கள் உதிரும்படி குரங்குகள் பாய்ந்து தேனை உகுக்கும். அதனால் நெடிய வேங்கட மலை மணம் பெற் றுத் திகழும்" என்பது நக்கீரர் குறிப்பாகும். 19

* Vide குறுந்தொகை, 260. 17. அகம்—27.
18. மதுரைக் காஞ்சி, வரி. 70—74. 19. அகம்—141.

வேங்கட நாட்டுப் பெருமக்கள்

சங்கப் பாக்களில் வேங்கடநாட்டு வள்ளல்கள் சிலர் குறிக்கப்பட்டுள்ளனர்.

(1) நன்னாகனார் என்ற புலவர் கரும்பனூர் கிழான் என்பவனைப் பாடியுள்ளார் :

" * * * *

ஒலிவெள் ளருவி வேங்கட நாடன்
உறுவரும் சிறுவரும் ஊழ்மா றுய்க்கு
மறத்துறை யம்பின் மான மறப்பின்
றிருங்கோ ளீராப் பூட்கைக்
கரும்ப னூரன் காதல் மகனே !" [20]

(2) கள்ளில் ஆத்திரையனார் என்ற புலவர் ஆதனுங்கன் என்பவனைப் பாராட்டிப் பாடியுள்ளார் :

'புன்றலை மடப்பிடி பிணையக் கன்றுதந்து
குன்றக நல்லூர் மன்றத்துப் பிணிக்கும்
கல்லிழி அருவி வேங்கடங் கிழவோன்
செல்வுழி எழாஅ நல்லேர் முதியன்
ஆத னுங்கன்". [21]

இருகாறும் கூறப்பெற்ற குறிப்புகளை நோக்க, 1. வேங்கடம் தமிழகத்தைச் சேர்ந்தது ; 2. வேங்கடம் திரையர் எனப்பட்ட தொண்டையர் ஆட்சிக்கு உட்பட்டது ; 3. வேங்கட மலைத் தொடர்க்கு அப்பாற்பட்ட பகுதியே வடுகர் நாடு ; 4. வேங்கட நாட்டைச் சேர்ந்த தமிழ்ப் புலவர்களும் வள்ளல்களும் சங்க காலத்தில் இருந்தார்கள் ; 5. வேங்கடத்தைப் பற்றிய பல விவரங்களைத் தமிழர் நன்கறிந்திருந்தனர்—என்பன உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தெளிவாகத் தெரிதல் காண்க.

---

20. புறம்—371. 21. புறம்—389.

## இளங்கோவும் வேங்கடமும்

மாமூலனார், 'விழவுடை விழுச்சீர் வேங்கடம்' என்று கூறியதும், 'கி.மு. அல்லது கி.பி. முதல் நூற்றாண்டினன் என்று கருதத்தக்க தொண்டைமான் என்ற அரசன் திருப்பதி மலைமீது பெருமாள் கோவிலைக் கட்டினான்' என்று வேங்கட வரலாறு கூறியதும் காண—வேங்கடம் சங்க காலத்திலேயே விஷ்ணு ஸ்தலமாகக் கருதப் பட்டது; அங்கு விழாக்கள் நடைபெற்றன என்பன அறியக் கிடக்கின்றன. அந்த விஷ்ணு ஸ்தலம் வரவரத் தமிழகத்திற் சிறப்புற்றது; தமிழகத்தின் வட எல்லையைக் குறிக்கும் வேங்கட மலைமீது பெருமாள் திருக்கோவில் கொண்டு எழுந்தருளியிருப்பதைத் தமிழ் மக்கள் தரிசிக்க விரும்புதல் இயல்பன்றோ? அந்த அவா, சங்க காலத்தில் ஓரளவு இருந்திருத்தல் வேண்டும்; சங்க காலத்து இறுதியில் அல்லது அதனை அடுத்துச் செய்யப் பட்டதாகக் கூறப்படும் சிலப்பதிகாரத்தில் வேங்கடம் சிறந்த விஷ்ணு ஸ்தலமாகப் பேசப்பட்டிருத்தலைக் காண்கிறோம். அப்பெருமானைத் தரிசிக்க மலையாளத்தில் உள்ள மாங்காடு என்னும் ஊரினனான பிராமணன் ஒருவன் சேர நாடு விட்டு யாத்திரையாகச் சென்றான் என்பது கவனிக்கத் தக்கது. இங்ஙனம் சென்று மீண்ட அவன் திருவேங்கட மலைமீது தான் கண்ட பெருமானது நின்ற கோலத்தை,

> "வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
> ஓங்குயர் மலையத்(து) உச்சி மீமிசை
> விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
> இருமருங் கோங்கிய இடைநிலைத் தானத்து

மின்னுக்கோடி உடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி
நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு
பொலம்பூ ஆடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்".

என்று வாயாரப் பாராட்டினன் என்று இளங்கோ அடிகள் குறித்துள்ளார். எனவே, சிலப்பதிகாரம் செய்த இளங்கோ அடிகள் காலத்தில் வேங்கடம் தமிழக எல்லை என்பதுடன் நில்லாது, சமயவழியிலும் தமிழர் உள்ளம் கவர்ந்த உயரிய இடமாக இலங்கியது என்னும் உண்மையை உள்ளவாறு உணரலாகும்.

வேங்கடத்திற்கு வடக்கே ஆதோனியைச் சுற்றியுள்ள பகுதி சாதவாஹன ராஷ்டிரம் என்பது சாஸனங்களால் அறியக்கிடக்கிறது. [22]

---

22. " On the otherside of it (Tondaimandalam), the region round Adoni is described in early inscriptions as Satavahani Ahara, sometimes as Satavahani Rashtra perhaps giving us the indication that it was a settlement of Satavahanas, which may be recent or early......thus we find the Satavahana rulers on this border of the Tamil country ......The provenance of Satavahana coins, in the region extending to the Northern Pennar to the Southern gives the indication of an effort of the Satavahanas to bring this region under their authority. The reference to the successful struggle against the Aryans, which some of the Chola monarchs claim to themselves as well as the Malayaman ruler of Tirukkovalur perhaps is a reflex of this effort on

# ஆந்திரப் பேரரசு

**கி.மு. 185, கி.பி. 250**

◉ தலை நகரங்கள்
▪ துறைமுகப் பட்டினங்கள்



முடிவுரை

இது காறும் கூறப்பெற்ற பழம்புலவர் பாடற்செய்திகளால் கீழ்வருவனவற்றை அறியலாம் :—

1. வேங்கட மலைத்தொடர் தமிழகத்தைச் சேர்ந்தது.

2. வேங்கட மலைத்தொடர்க்கு அப்பாற்பட்டது வடுகர் நாடு.

3. வேங்கட நாடு திரையர் எனப்பட்ட தொண்டைமான்களுக்கு உட்பட்டது.

4. வேங்கட நாட்டில் வாழ்ந்த புல்லி என்பவன் வேடர் தலைவன்; மழ நாட்டை வென்றவன்.

5. வேங்கட நாட்டு யானைகள் தமிழகத்தில் பெயர் பெற்றவை.

6. வேங்கட மலை நாட்டைப் பழம்புலவர் நன்கு அறிந்திருந்தனர்.

7. மாமூலனார், கல்லாடனார் முதலிய புலவர் சிலரேனும் வேங்கட நாட்டவராக நம்ப இடமுண்டு.

8. வேங்கட நாட்டில் புல்லி, ஆதனுங்கன், கரும்பனூர் கிழான் போன்ற வள்ளல்கள் - தமிழ்ப் புலவர்களை ஆதரித்த கொடையாளிகள் - இருந்தனர்.

---

the part of the Satavahanas".—Dr. S. K. Aiyangar's Int. to the Pallavas of Kanchi, p. 14.

"The Satavahana Empire extended from sea to sea and virtually comprised the whole of South India excluding the Chola, Pandya and Chera Kingdoms in the extremity."—K. M. Panikkar, A Survey of Indian History, p. 81.

# III. பல்லவர் காலத்தில் வட எல்லை
## (கி. பி. 300 - 900)

### பல்லவர் ஆட்சி

சங்கநூல்களில் பல்லவர் என்ற சொல் காணப்படவில்லை. ஆயின், கி. பி. 340-க்கும் 350-க்கும் இடைப்பட்ட காலத்தில் தென்னாட்டின்மீது படையெடுத்துவந்த சமுத்ரகுப்தன், 'காஞ்சியில் விஷ்ணுகோபன் என்ற பல்லவன் ஆண்டு வந்தான்' என்று தன் அல்லாஹபாத் கல்வெட்டிற் குறித்துள்ளான். இதனை நோக்க, தொண்டை மண்டலம் ஏறத்தாழக் கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் அல்லது நான்காம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பல்லவர் என்ற புதிய அரசமரபினர் ஆட்சிக்கு உட்பட்டிருக்கவேண்டும் என்பது தெரிகிறது. பல்லவர் ஆட்சி படிப்படியாக வலுப்பெற்றுக் கி. பி. ஆறாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டுவரை சிறந்த நிலையில் இருந்தது. பல்லவப் பெருநாடு கிருஷ்ணையாறு முதல் புதுக்கோட்டைச் சீமைவரை பரவி இருந்தது.* பல்லவ அரசர் பிராக்ருத - வட - தமிழ் மொழிகளில் தங்கள் பட்டயங்களையும் கல்வெட்டுகளையும் வெளியிட்டனர்.

"பல்லவர் தமிழர் அல்லர்; தெலுங்கரும் அல்லர். அவர்கள் பாரசீக நாட்டிலிருந்து வந்த பார்த்தியர் மரபினர்."[1] என்று சிறந்த ஆராய்ச்சி அறிஞராகிய ஹீராஸ் பாதிரியார் கூறியுள்ளார். அவர்கள் சாதவாஹனப் பேரரசு வீழ்ச்

---

* K. M. Panikkar, A Survey of Indian History, p. 109.

1. Fr. Heras - 'The Origin of the Pallavas,' Journal of the Bombay University', (1936).

சியுற்றதும் அதன் தென்பகுதியை உரிமையாக்கிக் கொண்டு பையப்பையத் தொண்டை நாட்டிற் புகுந்தனர்.* அவர்கள் 'தொண்டையர் கோன்' என்றும், 'தொண்டைமான்' என்றும் வழங்கப்பட்ட பழைய முறையைப் பின்பற்றித் தங்களையும் 'தொண்டைவேந்தர்', 'தொண்டைமான்கள்', என்று அழைத்துக்கொண்டனர்.

"தொண்டையந் தார்வேந்தன் நரேந்திரப் போத்தரையன்"[2]

என்பது பல்லவ - மகேந்திரவர்மனைக் குறிப்பது.

"பாசிலை தொண்டைப் பல்லவன் ஆணையின்."[3]

தொண்டை நாட்டில், பல்லவர் காலத்தில் கோட்டங்களின் பெயர்கள், ஊர்களின் பெயர்கள் முதலியன தமிழில் இருந்தன என்பதனால் அவை அனைத்தும் அவர்கட்கு முற்பட்ட காலத்திலிருந்தே வழக்கில் இருந்து வந்தன என்பது அறியப்படும். இது முன்னரும் வற்புறுத்தப்பட்டது. பல்லவர் காலத்து வெளியான தொண்டை நாட்டுக் கல்வெட்டுக் குறிப்புகள் சிலவற்றை எதிர்ப் பக்கத்தில் காண்க.

## நெல்லூர் ஜில்லாவிலும் தமிழ்

சங்ககாலத்தில் தமிழகத்தின் வட எல்லையாகக் கருதப்பட்ட திருவேங்கடம் இன்றைய சித்தூர் ஜில்லாவில் உள்ளது. திருவேங்கடத்திற்கு வடக்கே கடப்பை ஜில்லாவும் வடகிழக்கில் நெல்லூர் ஜில்லாவும் இருக்கின்றன. நெல்லூர் ஜில்லாவில் கூடூர்த் தாலூகாவில் இன்று 'மல்லம்' எனப்படும் ஊர் பல்லவர் காலத்தில் (கி. பி.

---

* K. M. Panikkar,—A Survey of Indian History, p. 83.

2. தளவானூர்க் குகைக்கோவில் கல்வெட்டு; S.I.I. Vol. 12.

3. தொல் - அகத் - சூ. 54 உரை.

| அரசன் | மண்டலம் | கோட்டம் | நாடு | ஊர் | சான்று |
|---|---|---|---|---|---|
| 1. நந்திவர்மன்-I (கி.பி 525-550) | தொண்டை மண்டலம் | புழல் கோட்டம் | அடையாறு | காஞ்சி வாயில் | Ep. Ind. III p. 141 |
| 2. பரமேசுவர வர்மன்-I (கி.பி. 670-685) | ௸ | ஊற்றுக்காட்டுக் கோட்டம் | நீர்வேளூர் நாடு | கூரம் (காஞ்சியி லிருந்து 7 கல்) | S. I. I. — 2 p. 144 |
| 3. நந்திவர்மன் II (கி.பி. 775-825) | ௸ | திருவேங்கடக் கோட்டம் | குடவூர் நாடு | திருச்சோகினூர் (திருச்சானூர்) | 262 of 1904 |
| 4. நந்திவர்மன்-III (கி.பி. 840-865) | ௸ | புழல் கோட்டம் | ஞாயிறு நாடு | திருக்காட்டுப் பள்ளி | S. I. I. —II. 98 |
| ௸ | ௸ | பையூர் இளங் கோட்டம் நெல்லூர் ஜில்லா | | திருவான்பூர் (மல்லம்) | Nellore Ins. Vol. I p. 430 |
| 5. நிருபதுங்கவர்மன் (கி.பி. 850-880) | ௸ | திருவேங்கடக் கோட்டம் | சிலை நாடு | திருவிப்பிரம் பேடு | 228 of 1902 |
| ௸ | ௸ | பழூவூர்க் கோட் டம் | மாங்காட்டு நாடு | காவேரிப்பாக்கம் | 394 of 1905 |
| 6. கம்பவர்மன் | ௸ | பல்குன்றக் கோட்டம் | தென் ஆற்றூர் | குளத்தூர் | 283 of 1919 |
| 7. அபராசிதவர்மன் (கி.பி. 870-890) | ௸ | பையூர் இளங் கோட்டம் | தெக்கூர் நாடு | சத்தியவேடு | 31 of 1912 |
| ௸ | ௸ | புழல் கோட்டம் | ஞாயிறு நாடு | ஒற்றியூர் | 163 of 1912 |
| 8. வைரமேகவர்மன் | ௸ | தாமல் கோட்டம் | | பொய்கை நல்லூர் | 150 of 1916 |

9-ஆம் நூற்றாண்டில்) 'திருவான்பூர்' என்ற தூய தமிழ்ப் பெயர் பெற்றிருந்தது. அக்காலக் கல்வெட்டைக் காண்க:

"ஸ்வஸ்தி ஸ்ரீ நந்தி போத்தரசர்க்குப் பதினேழாவது வையூர் இளங்கோட்டத்துத் திருவான்பூர் ஸபா மண்யன்.......அவ்வாற்றை (அவ்வாட்டை?)ப் பொன் அயிம்பத்தைந் கழஞ்சு கொள்ளும் மதுவார் அட்டுவித்த கழஞ்சு பொன்னும் விளக்க..........புறமாக ஆளுவ அரசர் விண்ணப்பத்தினால் சளுக்கி அரசரான ..........த்தியாகப் பணித்தோம். நாட்டாரும் ஊராரும் ஆள்வாரும் அறம் மறவற்க."*

இக்கல்வெட்டால், பல்லவர் காலத்தில் நெல்லூர் ஜில்லாவின் தென்பகுதியில் தமிழ் வழங்கிவந்தது என்பதும் நாட்டாரும் ஊராரும் ஆள்வாரும் தமிழ் அறிந்தவராக இருந்தனர் என்பதும் அப்பகுதி தொண்டை மண்டலத்தின் வடபகுதியைச் சேர்ந்தது என்பதும் நன்கறியலாம்.

கடப்பை ஜில்லா - ரேநாண்டுச் சோழ நாடு

சீன யாத்திரிகரான ஹியூன் - ஸங் என்பவர் அமராவதி (குண்டூர் ஜில்லா)யிலிருந்து 167 மைல் தென் மேற்கே சென்று (கி. பி. 639-640-ல்) சோழ நாட்டைக் கண்டதாகக் கூறுகின்றார். அவர் குறிப்பிட்ட இடம் கர்நூல் ஜில்லாப் பகுதியாகும் என்று கன்னிங்ஹாம் குறித்துள்ளனர்[4]. கடப்பை ஜில்லாவில் பல கல்வெட்டுகளும் சோழர் பரம்பரையைக் குறிக்கும் செப்புப் பட்டயம் ஒன்றும் கிடைத்துள்ளன[5]. ஹியூன்-ஸங் குறிப்

---

* Nellore Ins. Vol. I, p. 430. 4. Vide his Ancient Geography of India, p. 545. 5. Rangachari, cuddapah Ins. Nos. 309, 318, 350, 405, 409, 435, 453, 455. 550 & 560.

பிட்ட சோழ நாடு 'ரேநாண்டு - ஏழாயிரம்'[6] எனப்பட்டது. அதனை ஆண்டவர் ரேநாண்டுச் சோழர் எனப்பட்டனர். அவர்கள் தங்களைக் 'கரிகாற் சோழன் மரபினர்' என்று பட்டயங்களிலும் கல்வெட்டுகளிலும் கூறிக் கொண்டனர். அவர்தம் கல்வெட்டுகளும் பட்டயங்களும் கி. பி. 7-ஆம் நூற்றாண்டின என்பது அறிஞர் கருத்து.[7]

ரேநாண்டுச் சோழர் மரபியல்




இவ்விருதுப் பெயர்களை நோக்க, ரேநாண்டுச் சோழர் வடக்கே சாளுக்கியர் நட்பையும் தெற்கிலும் கிழக்கிலும் பல்லவர் நட்பையும் பெற்று வாழ்ந்தனர் என்பதை அறியலாம். அவர்கள் சிங்க முத்திரை பெற்றிருந்தனர். அவர்தம் அரசமா தேவியருள் இருவர் பெயர்கள் தமிழ்ச் சொற்களைப் பெற்றிருத்தல் கவனிக்கத்தக்கது :

(1) வசந்த - போற்றி - சோழ மஹாதேவி.[8]

---

6. ஏழாயிரம் கிராமங்கள் என்பர்.

7. A. R. E. 1905. II. 5-6. 8. 384 of 1904.

(2) இளஞ் சோழ - மஹாதேவி. கணவன் சோழ மஹா ராஜாதிராஜ விக்கிரமாதித்ய சத்யாதித்யன்.[9]

இங்ஙனம் சோழநாட்டிற்கு வடக்கே மிக்க தொலைவில் உள்ள கடப்பை - கர்நூல் ஜில்லாக்களை ஆண்டுவந்த ரேநாண்டுச் சோழர் சங்ககாலச் சோழர் மரபினர் என்பதில் ஐயமில்லை[10]. ரேநாண்டுச் சோழர் கடப்பை - கர்நூல் ஜில்லாக்களில் கி. பி. 7-ஆம் நூற்றுண்டில் எவ்வாறு வந்தனர்? சங்ககாலத்தில் அருவா வடதலை நாட்டைப் பவத்திரி[11]யைத் தலை நகராகக் கொண்டு தொண்டைமான் - 'திரையன்' என்பவன் ஆண்டதையும், தொண்டைமான் - இளந்திரையன் என்பவன் காஞ்சியைத் தலை நகராகக் கொண்டு அருவா நாட்டை ஆண்டதையும், சங்க இறுதிக் காலத்தில் (மணிமேகலை காலத்தில்) இளங்கிள்ளி சோழப் பிரதிநிதியாக இருந்து தொண்டை நாட்டை ஆண்டதையும் நோக்க, - கூடூர்த் தாலூகா ஒருகாலத்தில் 'கடல் கொண்ட காகந்தி நாடு' என்று வழங்கப்பட்டது என்பதும் 'ககந்தன்' என்பவன் ஆண்டதால் காவிரிப்பூம் பட்டினம் 'காகந்தி' எனப்பட்டது எனவரும் மணிமேகலையின் கூற்றும் நோக்க[12], - ரேநாண்டுச் சோழர் தம்மைக் கரிகாலன் மரபினர் என்று கூறலையும் நோக்க, - வட பெண்ணையாற்றுக்கு வடபால் உள்ள யாறு 'மண்ணேறு' என்ற தமிழ்ப் பெயருடன்

---

9. 393, 400 of 1904. 10. K. A. N. Sastry - Cholas Vol. I, p. 124. பிற்காலத் தெலுங்கு - கன்னட நாட்டுச் சிற்றரசரும் தங்களைக் 'கரிகாற் சோழன் மரபினர்' என்று கூறிக் கொண்டனர். 11. ரெட்டிபாளையம் - கூடூர்த் தாலூகா - நெல்லூர் ஜில்லா. 12. Nellore Ins. Vol I, Gudur-No. 87; Dr. S. K. Aiyangar - Int. to the Pallavas of Kanchi by R. Gopalan.

இன்றளவும் இருந்தலையும் நோக்க - தமிழ் நிலம் வடக்கே நெடுந்தூரம் பரவி இருந்தது என்பது தவறுன முடியாகாது.*

கடப்பை ஜில்லாவில் உள்ள அதபூர், நந்தலூர், (தமிழ்) - மேல் பாக்கை நாட்டு நிரந்தனூர், பொத்தப்பி † முதலிய இடங்களில் இருக்கும் கோவிற் கல்வெட்டுகளைத் தமிழிற் காண்க. அங்குள்ள கடவுளர் பெயர்கள் தமிழ்ப் பெயர்களே—பாபநாசமுடைய நாயனார், குலோத்துங்க

---

*"The region with which we are concerned, which for convenience, we may call the region of North Tondamandalam extending northwards of Kanchi and taking into it all the territory almost upto the river Krishna, has always been the debatable frontier of history for the Tamil country.......Probably they sprang from a family of Chola rulers who might have been planted in the north in early times; but they came into prominance only in the 7th century. They ruled over Maharajavadi Seven - thousand extending from Cuddappa eastwards to take into it the district called Pottappinadu round Kalahasti."

—Dr. S. K. Aiyangar, History of Tiruppati, Vol. I, pp. 222, 223-'4.

" Southen India, as distinguished from the plateau of the Deccan, from which it is seperated by the Krishna and Tungabadra rivers, has a character of its own, and a history generally independent of that of the rest of India. It is essensially the land of the Tamil race and speech, and accordinigly the greater portion of it was known in ancient times as Tamilakam ".

—V. A. Smith, Early History of India, p. 438.

† A. R. E., 1903, Nos. 570—616; 1912, Nos. 434-'5; 1914, Nos. 238—241. விளக்கம் பிற்சேர்க்கையிற் காண்க.

சோழ விண்ணகர், சொக்கப் பெருமாள் முதலியன காண்க.

## ஆழ்வார்களும் வேங்கடமும்

## (கி. பி. 300—900)

பல்லவர் தென்னாட்டில் பேரரசராக இருந்த காலத்திற்றான் (கி. பி. 300—900) நாயன்மாரும் ஆழ்வாரும் சிறந்திருந்து இரு சமயங்களையும் வளமுற வளர்த்து மறைந்தனர். ஆழ்வார்கள் தமிழகத்தின் வட எல்லையில் நின்ற திருக் கோலத்தில் உள்ள திருமாலை (திரு வேங்கடத்தானை)ப் பல பாக்களில் பாடிப் போற்றினர். அங்ஙனமே நாயன்மார்கள் (வேங்கடத்தைப் போலவே) தமிழகத்தின் வட எல்லையில் சிறப்புற்றிருந்த திருக்காளத்தி ஈசனைப் பாடிப் பணிந்தனர்.

1. பொய்கை ஆழ்வார் — தொண்டை நாட்டுத் தலைநகரான காஞ்சியைச் சேர்ந்தவர். இவர், "ஆவாதசி நாளில் வேங்கடத்தில் பெண்கள் மலர் மாலையும் நறும்புகையும் கொண்டு சென்று பெருமானை வழிபடுதல் மரபு" என்று கூறுதல் கவனிக்கத் தக்கது.

> "படையாரும் வாட்கண்ணார் பாரசிநாள் பைம்பூந்
> தொடையலோ டேத்திய தூபம் - இடையிடையில்
> மீன்மாய மாசூனும் வேங்கடமே மேலொருநாள்
> மான்மாய எய்தான் வரை."[13]

2. பூதத்தாழ்வார் — தொண்டை நாட்டு மஹாபலிபுரத்தில் பிறந்தவர். இவர் வேங்கடத்தைப் பற்றிப் பல பாக்களில் குறித்துள்ளார். மாதிரிக்காக ஒன்று காண்க:

> "மனத்துள்ளான் வேங்கடத்தான் மாகடலான் மற்றும்
> நினைப்பரிய நீளரங்கத் துள்ளான் - எனைப்பலரும்

13. செ. 82.

தேவாதி தேவன் எனப்படுவான் முன்னொருநாள்
மாவாய் பிளந்த மகன்."[14]

3. பேய் ஆழ்வார்— தொண்டை நாட்டுத் திரு மயி லாப்பூரில் பிறந்தவர். இவரும் வேங்கடத்தைப் பற்றிப் பல குறிப்புகள் குறித்துள்ளார். அவற்றுள் ஒன்று காண்க :

" உளன்கண்டாய் நன்னெஞ்சே ! உத்தமன் என்றும்
உளன்கண்டாய் உள்ளுவார் உள்ளத்து-உளன்கண்டாய்
விண்ஒடுங்கக் கோடுயரும் வீங்கருவி வேங்கடத்தான்
மண்ஒடுங்கத் தானளந்த மண்."[15]

" தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழ்அரவும் பொன்நாணும் தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து."[16]

4. திருமழிசை ஆழ்வார்—இவர் தொண்டை நாட்டுத் திருமழிசை என்னும் ஊரிற் பிறந்தவர். இவர் பல பாக் களில் வேங்கடத்தைப் பற்றிக் கூறியுள்ளார். அவற்றுள்,

" காண லுறுகின்றேன் கல்லருவி முத்துதிர
ஓண விழவில் ஒலியதிர — பேணி
வருவேங் கடவா ! என்னுள்ளம் புகுந்தாய்
திருவேங் கடமதனைச் சென்று."[17]

என்பது ஒன்று. திருவேங்கட மலையில் ஓண விழவு சிறந் திருந்தது என்பது இதனால் அறியப்படும்.

" சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை
நின்று வினைகெடுக்கும் நீர்மையால் "—[18]

என்று திருமழிசையாழ்வார் பிரசாரம் செய்தல் காணத் தக்கது. சங்ககால முதலில் 'வட எல்லையில் இருப்பது'

---

14. செ. 28.   15. செ. 40.
16. செ. 63.   17. செ. 41.   18. செ. 42.

என்ற சிறப்புப் பெற்றிருந்த வேங்கடம், பின்னர்ச் சமயச் சிறப்பும் பெற்றுத் தமிழ் மக்கள் உள்ளம் கவர்ந்த இடமாக இருந்தது என்பது இக்குறிப்புகளால் விளக்கமாகிறது அன்றோ?

5. ஏனைய ஆழ்வார்களும் சிறந்த வைணவத் தலமாகிய வேங்கடத்தைக் குறித்துள்ளனர். அவருள் குலசேகராழ்வார் வேங்கடத்தை நன்கு பார்வையிட்டவர்; மலைக் காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தவர்; கோனேரி கண்டு குதூகலித்தவர்;

"கோனேரி வாழும் குருகாய்ப் பிறவேனோ!"

என்று கவலை கொண்டவர்; "நின் பக்தர்கள் மிதித்து நடக்கும் படியாய் இருக்க நான் பேறு பெறவில்லையே!" என்று வருந்தினவர். திருமலை பற்றிய பாடல்களை நோக்கினால்—அவர் காலத்தில் திருமலை பொதுமக்கள் நாள்தோறும் சென்று வணங்கும் சிறந்த தலமாக விளக்கமுற்றிருந்தது என்பது அறியலாம்.

6. வரலாற்று உணர்ச்சியும் சமய நுட்பமும் உணர்ந்த திருமங்கையாழ்வார் (நந்திவர்ம) பல்லவ மல்லன் காலத்தவர் (கி. பி. 725-790). அவர் திருவேங்கடத்தைப் பற்றி 40 செய்யுட்கள் பாடியுள்ளார்.

இங்ஙனம் பல்லவர் காலத்தில் வாழ்ந்த ஆழ்வார் பன்னிருவரும், தமிழகத்தின் வட எல்லையாகச் சங்க காலத்திற் கருதப்பட்டுப் பாராட்டுப் பெற்ற வேங்கட மலையை—வைணவத் தலமாகக் கருதிப் போற்றிப் பல பைந்தமிழ்ப் பாக்களில் பாராட்டி மகிழ்ந்தனர்; தரிசித்து மகிழ்ந்தனர் எனின், வேங்கடம் பல்லவர் காலத்திலும் தமிழ் வழங்கப் பெற்ற பகுதியாகவே இருந்தது என்பது நன்கறியலாம். இஃதே உண்மை என்பதை முன்னர்க் காட்டிய

பல்லவர் காலக் கல்வெட்டுகளும் ஐயமற உறுதிப்படுத்தல் காண்க.

நாயன்மாரும் காளத்தியும்

தமிழகத்தின் வட எல்லை ஆகிய வேங்கடம் ஆழ்வார் பாராட்டுக்கு உரிமையானவாறே - அதே காலத்தில் (பல்லவர் காலத்தில்) வாழ்ந்த திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர், சுந்தரர் என்ற சைவசமய குரவர் மூவரும் திருக்காளத்தியைத் தமிழக வடகோடியில் உள்ள சிவத்தலமாகக் கருதினர். அவர்கள் அங்கு இருந்தபடியே கர்நூல் ஜில்லாவில் உள்ள திருப்பருப்பதம் முதலிய வடநாட்டுத் தலங்களைப்பற்றிப் பதிகம் பாடியுள்ளார். திருநாவுக்கரசர் ஒருவரே வடநாடு சென்று மீண்டவர். இதனால் தொண்டை நாட்டு வடகோடியில் உள்ள சிவத்தலமாக அக்காலத்தில் காளத்தி கருதப்பட்டது என்பது அறியலாகும். திருநாவுக்கரசர் தொண்டை நாட்டுத் தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருப்பாசூர் பணிந்து அங்கிருந்து பல்பதியும் நெடுங்கிரியும் காடுகளும் கடந்து திருக்காரிகரை * சென்று தரிசித்தார்; பின்னர் அங்கிருந்து புறப்பட்டுச் சென்று திருக்காளத்தியை அடைந்தார்; "மாகமார் திருக்காளத்தி மலையினைக் கண்டு மட்டற்ற மகிழ்ச்சி கொண்டார்; விழுந்து பணிந்தார்; நாள் ஆறில் கண்ணிடந்து அப்பிய கண்ணப்பர் வழிபட்ட காளத்தி ஈசனைக் கண்களாரக் கண்டு ஆனந்தக் கண்ணீர் பெருகப் பாடினார்; பரவினார்" என்னும் செய்திகளை வல்

---

* இக்காலத்தில் 'இராமகிரி' எனப்படுகிறது. சங்ககாலக் 'காரியாறு' இன்று 'காலேறு' என்று தெலுங்கப் பெயருடன் பாய்கிறது.—Dr. S. K. Aiyangar's 'Manimekalai in its Historical Setting, pp. 45-46.

லார்வாய்க் கேட்டுணர்ந்த சேக்கிழார் பெருமான் குறித்துள்ளார். சேக்கிழார் பொறுப்புள்ள சோழப் பெருநாட்டு முதல் அமைச்சர் ஆதலாலும் காளத்தி முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசித்தவர் ஆதலாலும் ஆங்காங்கு வழங்கிய செய்திகளைக் கேட்டு நூல் பாடினவர் ஆதலாலும், சமய குரவர் மூவரும் காளத்திவரை யாத்திரை சென்றிருத்தல் கூடியதே என்று கொள்ளலாம்.

### திருநாவுக்கரசர்

" பல்பதியும் நெடுங்கிரியும் படர்வனமும் சென்றடைவார்
செல்கதிமுன் அளிப்பார்தம் திருக்காரி கரைபணிந்து
தொல்கலையின் பெருவேந்தர் தொண்டர்கள்பின் உம்பர்குழாம்
மல்குதிருக் காளத்தி மாமலைவந் தெய்தினர்." [19]

இங்ஙனம் காளத்தி வந்து தரிசித்த அப்பர் (திருநாவுக்கரசர்) அங்கு ஒரு திருத்தாண்டகம் பாடினார். அதன்கண் உள்ள ஒரு செய்யுள் இங்குக் காண்க.

" நாரணன்காண் நான்முகன்காண் நால்வே தன்காண்
ஞானப் பெருங்கடற்கோர் நாவாய் அன்ன
பூரணன்காண் புண்ணியன்காண் புராணன் தான்காண்
புரிசடைமேல் புனலேற்ற புனிதன் தான்காண்
சாரணன்காண் சந்திரன்காண் கதிரோன் தான்காண்
தன்மைக்கண் தானேகாண் தக்கோர்க் கெல்லாம்
காரணன்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன் காண்அவனென் கண்ணு ளானே."

### திருஞான சம்பந்தர்

" திருந்தியஇன் னிசைவகுப்புத் திருக்கண் ணப்பர்
திருத்தொண்டு சிறப்பித்துத் திகழப் பாடிப்

19. அப்பர் புராணம், செ. 343.

பொருந்துபெருந் தவர்கூட்டம் போற்ற வந்து
பொன்முகலிக் கரைஅணைந்து தொழுது போகி
அருந்தவர்கள் எம்மருங்கும் மிடைந்து செல்ல
ஆளுடைய பிள்ளையார் அயன்மால் தேடும்
மருந்துவெளி யேஇருந்த திருக்கா ளத்தி
மலையடிவா ரம்சார வந்து தாழ்ந்தார்.

"தாழ்ந்தெழுந்து திருமலையைத் தொழுது கொண்டே
தடஞ்சிலா தலசோபா னத்தால் ஏறி
வாழ்ந்திமையோர் குழாம்நெருங்கு மணிநீள் வாயில்
மருங்கிறைஞ்சி உள்புகுந்து வளர்பொற் கோவில்
சூழ்ந்துவலம் கொண்டிறைவர் திருமுன் பெய்தித்
தொழுதுதலை மேற்கொண்ட செங்கை போற்றி
வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன்காண் பார்போல்
மெய்வேடர் பெருமானைக் கண்டு[20] வீழ்ந்தார்."[21]

இங்ஙனம் வீழ்ந்த சம்பந்தர்,

"சந்தமார் அகிலொடு சாதிதேக் கம்பரம்
உந்துமா முகலி[22]யின் கரையினில் உமையொடும்
மந்தமார் பொழில்வளர் மல்குவண் காளத்தி
எந்தையார் இணையடி என்மனத் துள்ளவே."

என்று தொடங்கும் திருப்பதிகம் பாடி மகிழ்ந்தார்.

"பிறகு அவர் திருக்காளத்தி மலைமீது நின்றபடியே ஸ்ரீ சைலம் முதலிய வடநாட்டுத் தலங்களைப் பற்றிப் பதிகம் பாடினார். என்னை? காளத்திக்கு வடக்கிலும் மேற்கிலும் உள்ள நிலப்பகுதியில் அருந்தமிழின் வழக்கு இல்லை ஆதலின் என்க" என்பது சேக்கிழார் வாக்கு.

சுந்தரர்

சுந்தரர் காஞ்சி, திருவல்லம் முதலிய இடங்களைத் தரிசித்துத் திருக்காளத்தியை அடைந்தார்.

---

20. கண்ணப்ப நாயனார். 21. சம்பந்தர் புராணம், செ. 1021-1022. 22. பொன் முகலி யாறு; சுவர்ணமுகி-வடமொழிப்பெயர்.

"தடுக்க லாகாப் பெருங்காதல் தலைநின் றருளும் கண்ணப்பர்
இடுக்கண் களைந்தாட் கொண்டருளும் இறைவர் மகிழ்ந்த காளத்தி
அடுக்கல் சேர அணைந்துபணிந் தருளால் ஏறி அன்பாறு
மடுப்பத் திருமுன் சென்றெய்தி மலைமேல் மருந்தை வணங்கினார்.[23]

காளத்திமலைமீதுள்ள சிவபிரான் பெயர்—காளத்தியீசன்
அம்மன் பெயர்—ஞானப்பூங்கோதை.[24]

இப்பெயர் வழக்குக் கி. பி. 7-ஆம் நூற்றாண்டினதாகும்.

முடிவுரை

புதியவராகத் தமிழகம் புகுந்த பல்லவர் காலத்திலும் (கி. பி. 300 - 900) தொண்டை நாடு தன் தமிழ் வளத்தை இழக்கவில்லை. ஆழ்வார்கள் திருப்பதி மலையில் பெருமானைத் தரிசித்துத் தமிழிற்றான் பாடினார்கள்; அதனை அடுத்துள்ள காளத்தி மலையிற் சிவபிரானை நாயன்மார் தரிசித்துத் தமிழிற்றான் பாடினார்கள். இருதிறத்தாரும் அவற்றுக்கு வடபால் செல்லவில்லை. அவற்றுக்கு அப்பால் மொழி வேறுபட்டதே காரணம்.

"வேங்கடத் தும்பர் மொழிபெயர் தேஎயம்."

என்று சங்ககாலப் புலவர் பாடியதும்,

"காளத்திக்கு வடக்கிலும் மேற்கிலும் அருந்தமிழின் வழக்கில்லை; அதனால் சம்பந்தர் காளத்தியிலிருந்தே வடநாட்டுத் தலங்களைப் பாடித் திரும்பி விட்டார்" என்று சேக்கிழார் பாடியதும் - வேங்கடத்திற்கும் காளத்திக்கும் வடக்கிலும் மேற்கிலும் அக்காலத்தில் தமிழ் வழங்கவில்லை என்னும் உண்மையை உணர்த்துகின்றன அல்லவா?

ஆயின், காளத்திக்கு வடகிழக்கேயுள்ள நெல்லூர் ஜில்லாவின் தென்பகுதி பையூர்க்கோட்டம் ஆதலால் கூடூர்த் தாலூகாவில் தமிழ் வழக்கு இருந்தது என்பது கல்வெட்டுகளால் தெரிகிறது. இந்த உண்மையை உணர்ந்துதான் போலும் சேக்கிழார் பெருமான், "சம்பந்தர் காலத்தில் (கி. பி. 7-ஆம் நூற்றாண்டில்) காளத்திக்கு வடக்கிலும் மேற்கிலும் தமிழ் வழங்கவில்லை" என்று குறித்தார்.

23. ஏயர்கோன் புரா. செ. 196. 24. அப்பர் திருப்பதிகம் செ. 9.

# IV. சோழர் கால வட எல்லை
## (கி. பி. 900—1300)

### சோழப் பெருநாடு

ஆதித்த சோழன் (கி. பி. 871-907): ஏறத்தாழக் கி. பி. நான்காம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டுவரை தம்மைத் தாழ்த்தித் தமது பேரரசை கைப்பற்றி யாண்ட பல்லவரைச் சோழர் மரபில் வந்த ஆதித்த சோழன் பழிக்குப் பழிவாங்கிச் சோழப் பேரரசை ஏற்படுத்தினான். அப்பேரரசு ஏறத்தாழ 400 ஆண்டுகள் சிறப்புற இருந்து பிறகு அழிந்தது. ஆதித்த சோழன் திருக்காளத்திக்கு அருகில் உள்ள தொண்டை மானாடு என்னும் இடத்தில் இறந்தான். வேங்கடம், காளத்தி இவற்றுக்கு வடபாற்பட்ட நிலப்பகுதி வடவர் கைப்பட்டதாதலால், ஆதித்தசோழன் எல்லைப் புறப் போரில் இறந்தவனாகக் கருத இடமுண்டு.* அங்கு, அவன் மகனான முதற் பராந்தகன் அவனை அடக்கம் செய்த இடத்தில் வளமான கோவில் ஒன்றை எடுப்பித்தான். அது ஆதித்தேசுவரம், கோதண்ட ராமேசுவரம் என்று பெயர்கள் பெற்றன. விழாக் காலங்களில் ஓராயிரம் பிராமணர் உணவுகொள்ள ஏற்பாடுகள் செய்யப்பட்டன.[1]

இராஜராஜன் (கி. பி. 985 - 1014): சோழப் பேரரசருள் மிக்க புகழ்பெற்றவன் இராஜராஜன். இவன் சீட்

---

*Dr. S. K. Aiyangar's 'History of Tiruppati', pp. 216-217, 235.

1. 286 of 1906, 230 of 1903; கோதண்டராமன் என்பது ஆதித்தனுக்கு வழங்கிய பிறிதொரு பெயராகும்.

புலிநாடு,[2] பாகிநாடு என்ற நாடுகளைக் (சித்தூர் - நெல்லூர் ஜில்லாக்கள்) கைப்பற்றினன்.[3] கூடூர்த் தாலுகாவில் உள்ள ரெட்டிபாளையம் என்னும் ஊரில் இராஜராஜனுக் கடங்கிய சிற்றரசன் (மும்முடி வைதும்ப மஹாராஜன்) கல்வெட்டுக் காணப்படுவதால்[4] நெல்லூர் ஜில்லா இராஜ ராஜன் ஆட்சிக்கு உட்பட்டதென்பதை அறியலாம்.

குண்டூரின் ஒருபகுதி, கிருஷ்ணை ஜில்லா-கோதாவரி ஜில்லாவின் ஒருபகுதி சேர்ந்த நிலப்பகுதி வேங்கைநாடு (வேங்கிநாடு) எனப்படும். அந்நாட்டைக் கி. பி. 7-ஆம் நூற்றாண்டு முதல் இரண்டாம் புலிகேசியின் தம்பி மரபினர் 'கீழைச் சாளுக்கியர்' என்ற பெயரால் ஆண்டுவந்தனர். அவர்கள் தலைநகரம் 'வேங்கி' (பெத்த வேங்கி) என்பது. இராஜராஜன் காலத்தில் அந்நாட்டில் குழப்பம் ஏற்பட்டதனல் அவன் வென்று சக்திவர்மன் என்பவனை அரசனுக்கி, அவன் தம்பியான விமலாதித்தன் என்பவனுக்குத் தன் மகள் குந்தவ்வை என்பாளை மணமுடித்தான்.[5] இக்கூட்டுறவினுல் இராஜராஜன் செல்வாக்குக் கோதாவரி யாறுவரை பரவியது. இராஜராஜன் காலத்தில் அவன் செல்வ மகனை இராஜேந்திரன் கஞ்சம் ஜில்லாவில் உள்ள மஹேந்திரமலையில் வெற்றித் தூணை நாட்டி மீண்டான்.[6] இராஜராஜன் சிற்றரசருள் கடப்பை ஜில்லாவில் மஹாராஜப் பாடியைச் சேர்ந்த இங்கல்லூர் நாட்டை ஆண்ட வைதும்பராயர் மரபினர் குறிப்பிடத் தக்கவர்.[7] இங்ஙனம் இராஜராஜன் ஏற்படுத்திய பேரரசு நீண்ட காலம் நிலைத்திருந்தது.

---

2. சித்தூர் ஜில்லா - மதனபள்ளித் தாலுகாவில் 'சிப்பிலி' என்னும் சிற்றூர் உள்ளது கவனிக்கத்தக்கது. 3. 79 of 1921.
4. Nellore Ins. 239. 5. Ind. Ant. Vol. 14, p. 52.
6. 396, 397 of 1896. 7. S. I. I. III. 52.

முதற் குலோத்துங்கன் (கி.பி. 1070—1120): வேங்கை நாட்டை ஆண்ட இராஜராஜன் மருமகனான விமலாதித்தனுக்கும் குந்தவ்வைக்கும் பிறந்த சாளுக்கிய இராஜ ராஜன் வேங்கை நாட்டை ஆளத் தொடங்கினான். இவனே தெலுங்கப் புலவர் திலகரானவரும் தெலுங்கில் முதல் காவியமாகிய பாரதத்தை வரைந்தவருமான நன்னய பட்டரை ஆதரித்தவன். இவன் காலத்தில் சோழர் உறவு நெருங்கி இருந்ததால் வேங்கி நாட்டுத் தெலுங்கு, நெல்லூர்-சித்தூர் ஜில்லாக்களிற் சிறிது நிறைய இடமிருந்தது. இங்ஙனமே தமிழர் திராக்ஷாராமம் வரை குடியேறி இருந்தனர். அவர்கள் அரசியல் அதிகாரிகள், வணிகர் முதலியோராவர். சாளுக்கிய இராஜராஜன் இராஜேந்திர சோழனுடைய மகளை மணந்து முதற் குலோத்துங்கனைப் பெற்றான். இராஜேந்திர சோழன், அவன் மக்கள் மூவர் ஆட்சி செய்த பிறகு சோழ அரசுக்கு உரிய பிள்ளை இல்லாததால், சாளுக்கிய - சோழனான முதற் குலோத்துங்கனே சோழப் பெருநாட்டுக்கு அரசன் ஆனான். அவனுக்குப் பின் அவன் மரபினரே சோழப் பேரரசு அழியும் வரை அரசாண்டனர். இந்தச் சாளுக்கிய சோழர் தமிழில் வல்லவராக இருந்து வந்தனர்.

முதற் குலோத்துங்கன் தன் மகளிருள் ஒருத்தியை (இராஜ சுந்தரியை)க் கலிங்க அரசனுக்கும் மற்றொருத்தியை (சூரிய வல்லியை) ஈழத்தரசனுக்கும் மணமுடித்தான்.[8]

முதற் குலோத்துங்கன் காலத்தில் தெலுங்கு நாட்டுச் சிற்றரசருள் சிறந்தவர் வேலநாண்டுச் சோழர் மரபினர் ஆவர். இவர்கள் தங்களைச் 'சோட(சோழ) மஹாராஜர்'

8. K. A. N. Sastry—Cholas, Vol. 2, p. 53.


இரண்டாம் குலோத்துங்கன்
கி.பி. 1133-1150.
வேங்கை
பொத்தப்பி
காஞ்சி
கருவூர்
பழையாறை
மதுரை
அநுராதபுரம்

என்று அழைத்துக் கொண்டனர். பொத்தப்பி நாட்டை ஆண்டவர் 'பொத்தப்பிச் சோழ' மஹாராஜர்' எனப் பட்டனர்.

இரண்டாம் இராஜராஜன் (கி. பி. 1146 - 1173): இவன் காலத்தில் தெலுங்க நாட்டுச் சிற்றரசர் பலர் இருந்தனர். திரிபுவன மல்லதேவ சோழ மஹாராஜன், ஜிக்கி தேவ சோழ மஹாராஜன் ஆகிய இருவரும் தங்களைக் கரிகாலன் மரபினர் என்று குறித்துள்ளனர்.[9] கோணராஜேந்திர லோகராஜன் ஒருவன்;[10] கொண்ட படும(ட்)டி புத்தராஜன் ஒருவன்;[11] வெலனண்டு அரசனான குலோத்துங்க ராஜேந்திர சோடய்யன் (சோழன்) ஒருவன்,[12] கொட்டாரி எர்ரம நாயக்கன் நெல்லூர் ஜில்லாவில் உத்யோகஸ்தனாக இருந்தவன்[13]. கொண்டூர் (குண்டூர் ?)த் தலைவனான ராமன் ஒருவன். இவன் கொண்டூரில் இருந்த இராஜ ராஜேசுவரதிற்கு (சிவன் கோவிலுக்கு)த் தானம் செய்துள்ளான்.[14]

இரண்டாம் குலோத்துங்கன் மகனான இரண்டாம் இராஜராஜனுக்குப் பின் வந்த இரண்டாம் இராஜாதிராஜன் காலத்தில் சோழப் பெருநாடு வடக்கே நெல்லூர், காளத்தி, நந்தலூர் (கடப்பை ஜில்லா) இவற்றுக்கு அப்பாலும் பரவி இருந்தது என்பது அங்குள்ள கல்வெட்டுகளால் அறியலாம்.[15] நெல்லூரைச் சித்தரசன் ஒருவன் ஆண்டு வந்தான்; அவன் பிரதானி

---

9. 203 of 1897, 193 of 1897. 10. 213 of 1897.
11. 216 of 1893. 12. 217 of 1893.
13. Nellore Ins. 59. 14, 695, 696 of 1920.
15. Nellore Ins. 105; 108 of 1922; 571 of 1907.

களில் ஒருவன் காளத்திக் கோவிலுக்குத் தானம் செய்துள்ளான்.[16]

மூன்றாம் குலோத்துங்கன் கல்வெட்டுகள் வடக்கே நெல்லூர், ரெட்டிபாளையம், கடப்பை ஜில்லாவில் பொத்தப்பி முதலிய இடங்களில் காணப்படுகின்றன.[17] மூன்றாம் இராஜராஜன் காலத்தில் நெல்லூர், செங்கற்பட்டு, கடப்பை ஜில்லாக்களைத் தெலுங்குச் சோழர் ஆண்டு வந்தனர். அவருள் சிறந்தவன் கண்ட கோபாலன் என்பவன். அவன் சோழர்க்கு நண்புனாக இருந்தான்.[18] மூன்றாம் இராஜேந்திரன் ஆட்சித் தொடக்கத்துக் கல்வெட்டுகள் நந்தலூர் (கடப்பை ஜில்லா), திரிபுராந்தகம் (கர்னூல் ஜில்லா) இவற்றிற் காணப்படுகின்றன ஆதலால், இவனது ஆட்சி யிறுதியில் தெலுங்க நாடு சோழப் பெரு நாட்டினின்று பிரிந்துவிட்டது என்பது பெறப்படும்.

ஆதித்தனால் உண்டாக்கப்பட்டு இராஜராஜனால் பலப்படுத்தப்பட்ட சோழப் பெருநாடு ஏறத்தாழக் கி. பி. 1300-ல் அழிந்து விட்டது. ஏறத்தாழக் கி. பி. 1260 வரை (ஏறத்தாழ 300 வருட காலம்) துங்கபத்திரையாறு வரைப்பட்ட தெலுங்க நாடு சோழர் ஆட்சியில் இருந்தது; சோழப் பேரரசர்க்கு உட்பட்ட தெலுங்கத் தலைவர்கள் அந்நாட்டின் பல பகுதிகளை ஆண்டு வந்தனர்; அவருள் நெல்லூர் ஜில்லாவில் இருந்த தெலுங்கச் சோடரும், கடப்பை ஜில்லாவில் இருந்த பொத்தப்பிச் சோழரும் குறிப்பிடத் தக்க அரச மரபினர். அவர்கள் காலத்தில் தெலுங்கமொழி நெல்லூர், சித்தூர் ஜில்லாக்களில் தலைகாட்டத் தொடங்கிய தென்னலாம்.

---

16. 105 of 1922. 17. Nellore Ins., Gudur 86; 601 and 602 of 1907; 435 of 1911.
18. 446 of 1919; A.R.E. 1920. II. 55.

இராமாநுஜர் தொண்டை நாட்டு ஸ்ரீ பெரும்புதூரினர். அவர் திருப்பதி மலையில் உள்ள பெருமான் கோவிலில் பல திருப்பணிகள் செய்துள்ளார்; வேங்கட நாட்டை யாண்ட (சோழர்க்கு அடங்கிய) யாதவராயன் என்ற அரசன் ஆதரவைப் பெற்றவர்; திருப்பதி அருகில் அக்கிரகாரம் ஒன்றை ஏற்படுத்தினர்; தம்முடைய நம்பிக்கைக்கு உரிய வைணவப் பெரியோர்களைக் கொண்டு கோவில் பூசை முதலியவற்றைக் கவனிக்க ஏற்பாடு செய்தார்; யாதவராயரைக் கொண்டு திருப்பதி நகரில் கோவிந்தராஜர் கோவிலைக் கட்டுவித்தார். அக்கிரகாரம் 'இராமாநுஜ புரம்' எனப் பெயரிடப்பட்டது. இராமாநுஜர் கோவிலில் வைகானஸ ஆகமப்படி பூசை நடைபெறச் செய்தார்; வியாழனன்று பெருமாளுக்கு உரிய ஆடையணிகள் நீக்கப் பெற்று மலர்களால் அலங்கரிக்க ஏற்பாடு செய்தார்; அன்று நாச்சியார் திருமொழி ஓத ஏற்பாடு செய்தார்; ஆழ்வார்களின் திருமேனிகளை எழுந்தருளச் செய்தார்.[19]

இராமாநுஜர்க்குப் பிறகு அவர் காலத்தவரான அனந்தாரியர் என்பவர் பெருமாள் கோவிலில் இராமாநுஜர் திருவுருவச் சிலையை எழுந்தருளச் செய்தார்; அதற்குத் திருவிழாச் செய்து வரலானார். அவ்விழாக் காலத்தில் 'இராமாநுஜர் நூற்றந்தாதி பாட ஏற்பாடு செய்தார். பின்னர்ப் பெரியாழ்வார் திருமொழியும் ஓதப்பட்டது.[20]

திருப்பதியை அடுத்த திருச்சானூர் எனும் அலர் மேல் மங்கைபுரக் கோவில் சோழர் காலத்தில் 'இளங்

---

19. History of Tiruppati, Vol. I. pp. 278-292.
20, Ibid. pp. 308-309.

கோவில்' எனப்பட்டது. அதனில் 'பெரிய நாட்டவர்' கார்த்திகை மாதத்திற் கூடிக் கோவில் சம்பந்தமான காரியங்களைக் கவனித்தனர்; 'காராளர் கற்பகம்' எனப் பட்ட திருமங்கையாழ்வார்க்கு நாட் பூசை செய்ய ஏற் பாடு செய்தனர் என்று மூன்றும் இராஜராஜ சோழன் காலத்து (19-ஆம் ஆட்சி ஆண்டு)க் கல்வெட்டுக் கூறு கிறது.[21]

1. குடவூர் நாடு என்பது திருப்பதியைச் சுற்றியுள்ள ஊர்களைத் தன் அகத்தே கொண்டது. 2. வைகுந்த வள நாடு என்பது சந்திரகிரியைச் சுற்றியுள்ள ஊர்களைக் கொண்ட நிலப்பகுதி. 3. சித்தூரும் அதனைச் சூழவுள்ள ஊர்களும் துய்யா நாடு என்னும் பகுதியைச் சேர்ந்தவை. 4. திருப்பதிக்குக் கிழக்கில் காளத்தி வரை உள்ள ஊர் கள் ஆற்றூர் நாடு என்னும் பகுதிக்கு உட்பட்டவை. இந்த நன்கு நாடுகளும் வேங்கடக் கோட்டத்தைச் சேர்ந் தவை.[22] இவை அனைத்தும் ஐயத்திற்குச் சிறிதும் இடம் இன்றித் திருவேங்கடம் வரை தமிழ் நாடு தான் என்பதைப் பிற்காலச் சோழர் காலத்திலும் உறுதிப் படுத்துதல் காண்க.

## தமிழ் நூற் சான்று

(1) வீரராஜேந்திர சோழன் (கி. பி. 1063—1069) மீது இலக்கணம் பாடிய புத்தமித்திரர் தமது வீரசோழி யத்துள்,

> "வீறு மலிவேங் கடம்குமரிக்கிடை மேவிற்றென்று
> கூறும் தமிழ்."......

21. 262 of 1904; திருச்சானூர், யோகிமல்லபுரம் கல்வெட்டு கள் (259 - 275 of 1904) எல்லாம் தமிழ்க் கல்வெட்டுகளே.

22. History of Tiruppati, Vol. I, p. 230.

(வேங்கடம், குமரி ஆகிய இரண்டிற்கும் இடைப் பட்ட நிலத்தது தமிழ்) என்று குறித்திருத்தல் காண்க.

(2) மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் (கி. பி. 1178—1218) நன்னூல் செய்த பவணந்தி முனிவர் தமிழக எல்லைகளைக் குறித்துள்ளமை காண்க :

> "குணகடல் குமரி குடகம் வேங்கடம்
> எனுநான் கெல்லையில் இருந்தமிழ்க் கடலுள்."

எனவே, பிற்காலச் சோழர் காலத்திலும் வேங் கடமே தமிழகத்தின் வட எல்லை என்பதைப் புலவர் நன்குணர்ந்திருந்தனர் என்பது தெளிவாதல் காண்க.

தமிழர் தொன்று தொட்டு இங்ஙனம் தம் நாட்டு எல்லையைக் குறித்தவாறு - சிறப்பாக வட எல்லையைக் கூறியவாறு, தெலுங்கர் தமது நாட்டுத் தென் எல்லை யையோ பிற பக்க எல்லைகளையோ விடாமற் குறித்தன ராகத் தெரியவில்லை. இது கவனிக்கத் தக்கது.

## நெல்லூர் ஜில்லாவில் தமிழ்க் கல்வெட்டுகள்

நெல்லூர் ஜில்லாவின் பல பகுதிகளில் சோழர் காலத்துத் தமிழ்க் கல்வெட்டுகள் காணக்கிடக்கின்றன. அவற்றின் நடை முதலியவற்றிற்கும் தமிழ் நாட்டுக் கல் வெட்டு நடை முதலியவற்றுக்கும் வேறுபாடு இல்லை. எனவே, சோழப் பெருநாடு முழுவதிலும் ஒரேவகைத் தமிழ்நடை வழக்கில் இருந்தது என்பதை அறியலாம். சோழர் காலத்தில் நெல்லூர் ஜில்லாவில் தமிழ் இடப் பெயர்கள் வழக்கில் இருந்தன என்பதைக் கீழ்வரும் கல் வெட்டுகளால் அறியலாம் :—

(1) "ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவன சக்ரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு முப்பத்தைந்தா

வது நெல்லூர் ஸ்ரீ மதுராந்தகப் பொதுத்தப்பிச் சோழ னேன் நல்ல சித்தரசனேன் - ஜெயங்கொண்ட சோழமண்ட லத்து நெல்லூர் நாட்டு [23] மேலைவாசல்................".

(பத்தைபாடு கிராமம் - ஆத்மகூர்க் கல்வெட்டு 18.)

(a) ஜயங்கொண்ட சோழ மண்டலத்து - சேதிகுல மாணிக்க வளநாட்டு - படைநாட்டு - நெல்லூரான விக் கிரம சிங்கபுரம்.

(2) "................ ஜயங்கொண்ட சோழமண்டலத்து - அங்கடிபாத்த நாட்டு - செறுடிணை (ஊரின் பெயர்) யில் கேசவப்பெருமாளுக்கு................"

(சிரமன கிராமம் - ஆத்மகூர்க் கல்வெட்டு 26.)

(3) காவிரிக்கு அணை இடுவித்த கரிகாலசோழன் மரபினரான எர்ரசித்தன் தேவசோழ (ட) மஹாராஜன் ................" (காலம் கி. பி. 1139.)

(மஹிமலூர் - ஆத்மகூர்க் கல்வெட்டு 38.)

(4) "சென்னூர்-சென்ன கேசவப்பெருமாள் கோவில் கல்வெட்டு - கூடூர்த்தாலூகா, "திரிபுவன சக்ரவர்த்திகள் ஸ்ரீ வீரராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு 13-ஆவது ஆனி மாசத்தில் சேறுவனூரில் நீலகண்ட தேவர் கோவி லில் இருந்து செய்த முடிவு................"

இவ்வூர்க் கோவில்களில் உள்ள சோழர்காலக் கல் வெட்டுகள் பல[24] ஆகும்.

(5) கூடூரில் உள்ள அழகநாதர் கோவில் தமிழ்க் கல் வெட்டுகள் பல ஆகும். இன்றைய கூடூர், சோழர் காலத்

---

23. நெல்லூர் தொண்டை நாட்டைச் சேர்ந்தது - என்பதை உறுதிப்படுத்தும் இக்கல்வெட்டுப் போற்றத் தக்கது.

24. Nellore Ins.—Gudur Nos. 4–18.

தில் - "ஜயங்கொண்ட சோழ மண்டலத்து மேலைப் பட்டைய நாட்டு - குழலூர்" எனப்பட்டது[25].

(6) குனுபாடு - புத்தநாத சுவாமி கோவில் - முதற் குலோத்துங்கன் காலம் - மதுராந்தகப் பொத்தப்பிச் சோழன் திருவேங்கட முடையானுக்குத் திருவிடையாட்டமாக வேலூரை விட்டான்.[26]

(7) கிருஷ்ணபட்டினம் - கூடூர்த்தாலூகா - (கி. பி. 1256 - 1257) வீரராஜேந்திர சோழன் காலம் - கொல்லத்துறையான கண்ட கோபாலப் பட்டினத்தாரும் பதினெண் நாட்டுப் பரதேசிகளும் தேசநாயகன் திருநந்தவனத்திற்கூடி மனுமசித்தீசுவரம் உடைய நாயனார்க்குப் பொருள் உதவினர்[27]. இவ்வூரில் 5 தமிழ்க் கல்வெட்டுகள் இருக்கின்றன[28].

(8) கிருஷ்ணபட்டினம் - (கி. பி. 1279-80) சித்தீசுவரர் கோவில் - "திரிபுவன சக்ரவர்த்திகள் ஸ்ரீ இருமடி திருக்காளத்தி தேவர்க்கு யாண்டு 2-வது கொல்லித்துறையான கண்ட - கோபாலப்பட்டினத்து நாடு நகரமலை மண்டலத்தோரும் பதினெண்பூமிப் பரதேசிகளும் ஐந்நூற்றுவன் திருக்காவணத்து நிறைந்திருந்து மனுமசித்தீசுவரமுடைய நாயனார்க்கு அமுதுபடி சாத்துப்படி உள்ளிட்ட.................."[29].

(9) குருசேர்லபாடு - கூடூர்த்தாலூகா - (கி. பி. 1192-93)—மூன்றாம் குலோத்துங்க சோழன் காலம் - "ஜயங்கொண்ட சோழமண்டலத்து - சேதிக் குலமாணிக்க வளநாட்டு - படைநாட்டு நெல்லூர் - *ஆன விக்கிரம சிங்கபுரம்

25. Ibid. Nos. 20-33. 26. Ibid. 34.
27. Gudur-39. 28. Gudur, 39-45. 29. Ibid. 45.
* நெல்லூர் தொண்டைநாட்டது என்றுகூறப்படல் காண்க.

கோபாலப் பெருமானுக்கு மதுராந்தகப் பொத்தப்பிச் சோழன் இராஜகண்ட கோபாலன் தருமம்.''...........''[30].

(10) மடமன்னூர் - கூடூர்த் தாலூகா - மூன்றாம் குலோத்துங்கன் காலம். "ஜயங்கொண்ட சோழமண்டலத்து - சிங்கட்டை நாட்டு - மடுவேனூர்...........''[31].

(11) மல்லம் - கூடூர்த்தாலூகா - தெலுங்கு அரசன் காலம். "ஜயங்கொண்ட சோழமண்டலத்து - பையூர் இளங்கோட்டத்துக் கீழைப்பட்டைய நாட்டு - ஒக்காட்டு நாட்டுத் - திருவான்பூர்'' [32] இவ்வூரில் உள்ள தமிழ்க் கல்வெட்டுகள் பல [33] ஆகும். திருவான்பூராகிய (இன்றைய) மல்லத்தில் காணப்படும் கல்வெட்டுகள் நிலத்திற்குரிய எல்லைகளைக் குறித்திருத்தல் காணத்தக்கது:—

"...............இந்நாயனார்க்குத் தேவதானமாக இவ்வூர் நிலத்தில் இராசராசன் பெருவழிக்கு மேற்கும் ஒட்டை ஏரிக்களாக்கு வடக்கும் ஆறார் எல்லைக்குக் கிழக்கும் கொங்கில் எல்லைக்குத் தெற்கும்...............''.

(12) ரெட்டிபாளையம் - கூடூர்த்தாலூகா - தெலுங்கு அரசன் காலம். இது சங்ககாலத்து அருவா வடதலை நாட்டுத் தலைநகரம். இதன் சங்ககாலப் பெயர் 'பவத்திரி' என்பது[34].

(13) ரேபூர் - ராஜ-பாளையம் - மலையடிவாரத்தில் உள்ள பாறைக் கல்வெட்டு - "திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு 23....... விக்கிரம சிங்கபுரமான நெல்லூரில் கழையிட்ட காடுச்

30. Ibid. 50. 31. Ibid. 51.
32. Ibid. 53. 33. Ibid. 55-80.
34. அகநானூறு, 340; Dr. S. K. Aiyangar's Int. to the Pallavas of Kanchi, p. xii.

சருதேவற்குச் சிலைகளும் நாட்டில் ஊட்டுக் கூக(ன்) மலையடியில் பிச்சண்டி நாயக்கர் கட்டுவித்த ஏரி....நல்ல சித்தரசரும் உள் உடேக்கூரில் வெள்ளாளரும் கூடி........"[35]

(14) வஸ்லவாரி பாளையம் - இனுகுண்டாவைச் சேர்ந்த சித்தூர் - பிமேசுவரர் கோவில் - முதற் குலோத்துங்க சோழன் 39-ஆம் ஆண்டுக் கல்வெட்டு.

"........பெரும்பூண்டி வடுகப்பட வளவன் மகன் உண்டியப்பட வளவன் பாக்கை நாட்டு இருங்குண்டை (இனுகொண்டா)......[36]

(15) வேங்கடகிரி தாலூகா-சாபலபள்ளி கிராமத்துத் தமிழ்க் கல்வெட்டுகள் பல.

மூன்றாம் குலோத்துங்கன் காலம் - கோவில் பட்டர்களின் பெயர்கள் - 1. லக்ஷ்மண பட்டன், 2. திருவேங்கட பட்டன், 3. மலைநின்றான் பட்டன், 4. ஆவுடையான் பட்டன்.[37]

(16) ஜயங்கொண்ட சோழ மண்டலத்துப் பாக்கை நாட்டுப் பகாம நாட்டு நாகபுதோல் நகரம் யாதவராயர் ஆணைப்படி எர்ரசித்தரசன் அமைத்தான். அங்கு ஏழுலக முடையாள் கமலமாதேவியார் கல்லுவித்த கமலமாதேவிப் புத்தேரி - மூன்றாம் குலோத்துங்கன் காலம்-ஷை இடம்.[38]

(17) சாபலபள்ளி - இராஜமல்ல சதுர்வேதி மங்கலத்தில் இராஜமல்லன் எடுப்பித்த யாதவ நாராயணப் பெருமாளுக்கு - கமல மஹாதேவிப் பெருவாய்க்கால்,........ தொண்டைமான் ஏரி........இராஜமல்லன் பிடாரி வரப்ரசாதனா.[39]

---

35. Nellore Ins. Vol. III. Rapur, No. 4.
36. Ibid. Sulurpet, No. 26. 37. Venkatagiri Ins. No. 10; (தமிழ்ப் பெயர்களைக் காண்க). 38. Ibid. No. 11.
39. Ibid. No. 16.

(18) சூலூர்ப் பேட்டை - உட்சூரு - கல்வெட்டில் 'உச்சியூர்' என்பது இதன் பழம்பெயர்.[40]

(19) ஜயங்கொண்ட சோழமண்டலத்துப் பையூர் இளங்கோட்டத்து - வேங்கா நாட்டுச் சுரலூர் ஆன சிங்களாந்தபுரம்........தனிக்கூத்துக் கண்டாள் தர்மம்.[41] இச் 'சுரலூர்' என்ற பெயரே நாளடைவில் மருவிச் 'சூலூர்' என்றாயிற்று - என்பது இக்கல்வெட்டால் அறியப்படும்.

இன்றைய தெலுங்குப்பெயர்-பழைய தமிழ்ப்பெயர்-சான்று

1. ஆத்மகூர்—ஆத்தக்கூர்—கல்வெட்டு, 14.
2. சென்னூரு—செருவனூர்—கூபேர், 4.
   கூபேர்ச்சிவன்கோயில் பெயர்—அழகநாதர் கோயில்—கூபேர், 20-33.
3. கூபேர்—குமுலூர்—கூபேர், 20-33.
   (ஜயங்கொண்ட சோழமண்டலத்து-மேலைப்பட்டைய நாட்டுக் குமுலூர்)
4. கிருஷ்ணபட்னம்—கொல்லத்துறை—கூபேர், 39-45.
5. மடமன்னூரு—மடுவனூர்—கூபேர், 51.
6. மல்லம்—திரு ஆன்பூர்—கூபேர், 53.
7. ரெட்டிபாளையம்—பவ்வத்திரி—கூபேர், 86.
8. ரட்டமல—இரட்டை மலை—கூபேர், 106.
9. நேலபேரு—சிறுமணம்பூண்டி—கூபேர், 108.
10. வல்லூரு—வல்லூர்—கூபேர், 109.

சித்தூர் ஜில்லாவில் தமிழ்க் கல்வெட்டுகள்

சித்தூர் ஜில்லாவில் உள்ள சிறப்பிடங்களின் தமிழ்ப் பெயர்கள் இவையாகும்.— (1) திருத்தணிகை, (2) திருப்பதி, (3) திருக்காளத்தி, (4) புங்கனூர், (5) புத்தூர்,

40. Sulurpet Ins. No. 19.    41. Ibid. No. 4.

(6) சித்தூர் (சிற்றூர்). 'திரு' என்னும் அடைமொழி தமிழுக்கே உரியதாகும். 'திருத்தணிகை'—'ஸ்ரீ தணிகை' என்று வழங்கியதில்லை; 'திருப்பதி'—'ஸ்ரீபதி' என்று வடமொழி வழக்குப் பெற்றதன்று. இந்த ஜில்லா 1911-ல் தான் புதிதாக உண்டாக்கப்பட்டது. அதற்கு முன் இதன் தாலூகாக்கள் சில வட ஆர்க்காடு ஜில்லாவி லும் சில கடப்பை ஜில்லாவிலும் சேர்க்கப்பட்டிருந்தன.

1. புங்கனூர்க் கல்வெட்டுகள் 4; 2 தமிழ், 2 கன்னடம், தெலுங்கு இல்லை. "ஜயங்கொண்ட சோழ மண்டலத்துப் பழுவூர்க் கோட்டத்துப் பெரும்பாணப் பாடியைச் சேர்ந்த புலிநாட்டுக் குங்கனூர்"......சிவன் பெயர் - திருக்கொள்ளீசுவரமுடைய மகாதேவர்.[42]

2. லத்திகம் - இங்குள்ள கல்வெட்டுகள் 10; எல்லாம் தமிழ்க் கல்வெட்டுகளே. இதன் பழைய பெயர் ஜயங்கொண்ட சோழ மண்டலத்து - பழுவூர்க் கோட்டத்து - வடபுலிநாட்டு - கோயாற்றூர். சிவன் கோவில் இருங்கோளீசுவரம் எனப்பட்டது.[43]

3. மினிகி - ஜயங்........வடபுலி நாட்டு - முதுகுமக்கி என்பது இதன் பழைய பெயர்.[44]

4. மூலைகவாடி - ஜயங்.........புலிநாட்டு - மூக்கை வாடி என்பது. இங்குத் தெலுங்கக் கல்வெட்டே இல்லை.[45]

5. யாட்டவாகிலி - ஜயங்........... - புலிநாட்டு - எட்டாவாய்க்கால் என்பது இதன் பழைய பெயர். சிவன் பெயர் - இருகீசுவரமுடைய நாயனார். இங்கும் தெ. க.

---

42. 540–543 of 1907. 43. 544–553 of 1907.

44. 568 of 1907. 45. 572–574 of 1907.

இல்லை. விஜயநகர அரசர்காலக் கல்வெட்டும் தமிழி லேயே உள்ளது.[46]

6. மோகிலி - பழைய பெயர் முழுயில்; சிவன் பெயர் - திருமாணியூறல் நாயனர். தெ. க. இல்லை.[47]

7. பூதலபட்டு - பழைய பெயர் ஜயங்........பழூர்க் கோட்டத்து - பூத்தலைப்பட்டு. சிவன் பெயர் - பீமேசு வரமுடைய நாயனர்.[48]

8. காணிப்பாக்கம் - பழைய பெயர் காவணிப் பாக்கம்; சிவன் பெயர் - மணிவண்டீசுவர முடையார்; தெ. க. இல்லை.[49]

9. கட்டமச்சி - தூய் நாட்டுக் கீழைக் கட்டமச்சி என்பது பழைய பெயர்; தெ. க. இல்லை.[50]

10. தேனேபல்லி - தேனியப்பள்ளி என்பது பழைய பெயர்.[51]

11. சத்ரவாத - சத்திரப்பாடி - பழைய பெயர்; தெ. க. இல்லை. ஜயங்........ - குன்றவர்த்தனக் கோட் டத்து - மாங்களூர் நாட்டு - சத்திரப்பாடி........சிவன் பெயர் - அழகிய திருச்சிற்றம்பலமுடைய நாயனர்.[52]

12. சேனூர் - பழைய பெயர் சேய்ஞலூர்; கடவு ளர் பெயர்கள் - திரு அகத்தீசுவரமுடைய தேவர், திரு மேற்றளி தேவர்.[53]

13. முல்லந்தரம் - பண்டைப் பெயர் - முள்ளண் டம்; கம்மாளர் தெரு இருந்தது; சிவன் பெயர் - தான் தோன்றீசுவர முடையார். தெ. க. இல்லை.[54]

---

46. 575–577 of 1907. 47. 587 of 1907.
48. 53–56 of 1907. 49. 57–60 of 1907.
50. 61 of 1908. 51. 64 of 1908. 52. 387–391 of 1912.
53. 393–4 of 1912. 54. 396 of 1912.

14. திருத்தணி - ஐயங்........... - குன்றவர்த்தனக் கோட்டத்து - தணியல். நாட்டுத் - திருத்தணியல் (சதா சிவராயர் காலத்துக் கல்வெட்டு).[55]

இத்தகைய உண்மைகளைச் சித்தூர் ஜில்லாவில் பல ஊர்களில் உள்ள பழைய கோயில் கல் வெட்டுகள் உணர்த்துகின்றன. இவை அனைத்தும் உணர்த்துவ தென்னை? சித்தூர் தொண்டை நாட்டைச் சேர்ந்தது என்ப தன்றோ பொருள்![56] ரேணிகுண்டாவை அடுத்துள்ள குடிமல்லம் கல் வெட்டுகளில், "திருவேங்கடக் கோட்டத்து-சிலைநாட்டுத்-திருவிப்பரம்பேடு" என்றும், கடவுள் பெயர் பரசிராமேசுவரம் உடையார் என்றும் கூறப்பட்டிருத்தல் காண்க.[57]

"It is worthy of note that the *earlier insciptions* at Tondamanad, Kalahasti, Gudimallam, Tiruppati, Tiruchchanur and Yogi-Mallavaram in the North Arcot* district *are all in Tamil*, though the prevailing language is at present Telugu. The same was the case at Nellore in the 12th and the 13th centuries. We may, therefore, conclude that the tract comprising these villages and *the southern portion of the Nellore district was originally Tamil country* and the change of language into Telugu probably began during Vijayanagara times. The fact that Krishnaraya found it necessary to add a Telugu version of one of his inscriptions at Tirumalai **shows that the change had

---

55. 443 of 1906.

56. A. R. E. 1908, Nos. 53-56; 1912, Nos. 387-410.

57. A.R.E. 1913, No. 314; S. I. I. IV. Nos. 312-322, 2, 413-418.

* இப்பொழுது சித்தூர் ஜில்லா. ** திருப்பதி.

already commenced. But perhaps it was during the time of Venkata I (1586 to 1613 A. D.) when the seat of the Vijayanagara Government was removed to Chandragiri that Telugu became prevalent in that part of the country and was eventually declared the language of the Court."[58] (Italics ours).

முடிவுரை

*இது காறும் கண்ட சோழர் காலக் கல்வெட்டுகளாலும் வரலாற்றுக் குறிப்புகளாலும் நாம் நடுவு நிலையினின்றும் அறியத் தகுவன இவையாகும் :—*

(1) *நெல்லூர் ஜயங்கொண்ட சோழமண்டலம் எனப்பட்ட தொண்டை நாட்டைச் சேர்ந்தது; அஃதாவது வடபெண்ணை யாறு வரை தொண்டை நாட்டு நிலப்பகுதி தமிழகமே ஆகும்.*[59]

---

58. Venkayya's Report, A.R.E. 1904 - 14. (p. 6)

59. "Mr. V. Venkayya contends on page 7 of the Epigraphical Report for 1903-04 that the prevalence of Tamil incriptions in the south indicates that *in modern times the Telugu language has extended southwards.* The facts derived from the present collection are these:—In Sulurpet out of 20 inscriptions, 4 are Telugu and all these seem to be comparatively modern; a similar remark applies to Venkatagiri where there are 5 Telugu out of a total of 27; Gudur has 118 inscriptions, of which 22 are Telugu, (95 are Tamil, 1 Sanskrit); Rapur shows 67 Telugu inscriptions out of a total of 79 and some of the former are dated in the thirteenth and fourteenth centuries; *a similar remark applies to Nellore* which possesses 64 Telugu inscriptions in a total of 124. Old Telugu inscriptions are thus not unknown in the Southern part of the

(2) நெல்லூர் முடியவுள்ள தொண்டை நாட்டில் பிற்காலச் சோழர் காலத்திலும் தமிழே பெரு வழக்காக இருந்தது.

(3) நெல்லூர் ஜில்லாவில் இடப் பெயர்கள் - தெய்வப் பெயர்கள் - மக்கட் பெயர்களுள் பெரும் பாலன பழந்தமிழ்ப் பெயர்களாகவே கல்வெட்டுகளில் காணப்படுகின்றன.

(4) ஆயினும் வடக்கே வளர்ச்சி பெற்று வந்த தெலுங்கு, தெலுங்குச் சோழர் ஆட்சியாலும் தெலுங்கு நாட்டுக்குத் தொண்டை நாடு அண்மையதாதலாலும் தொண்டை நாட்டைச் சேர்ந்த நெல்லூர் ஜில்லாவில் பையப்பைய நுழையத் தொடங்கியது என்பது சில கல்வெட்டுகளைக் கொண்டேனும் அறியலாம்.

(5) திருப்பதி மலையில் சோழர் காலத்தில் இராமாநுஜர் திருப்பணிகள் பல செய்தார். நாச்சியார் திருமொழி, ராமாநுசர் நூற்றந்தாதி, பெரியாழ்வார் திருமொழி ஆகிய மூன்றும் ஓதப்பட்டன.

---

district, just as old Tamil inscriptions occur in such unquestionably Telugu taluks at Atmakur, but on the whole, *Mr. Venkayya's conclusions seem to be correct,* for it may be said as a general thing that Choda or Chola inscriptions are in Telugu in the North of the district and in Tamil in the South. *The line of division between the two languages may, in the thirteenth century, have lain in the Nellore taluk* but Rapur seems to have always been Telugu." (Italics ours.)

—Alan Butterworth and V. Venugopal Chetty, Nellore Ins. Vol. I, Int. p. 8.

(6) பழைய பழுவூர்க் கோட்டம், குன்றவர்த்தனக் கோட்டம், வேங்கடக் கோட்டம் என்பனவே இன்றைய சித்தூர் ஜில்லா என்பதும் கல்வெட்டுகளால் நன்கு புலனாகின்றன.

(7) தொண்டை மண்டலத்துப் பழைய கோட்டங்களின் பெயர்களும் நாடுகளின் பெயர்களும் ஊர்களின் பெயர்களும் தூய தமிழ்ப் பெயர்களாகவே சோழர் காலத்திலும் இருந்து வந்தன.

சுருங்கக் கூறின், தொண்டை நாட்டின் வேங்கடம், காளத்தி[60], கூடூர்ப் பகுதிகள் பிற்காலச் சோழர் காலத்திலும் தமிழகப் பகுதிகளாகவே இருந்து வந்தன.



60. "அங்கண்வட திசைமேலும் குடக்கின்மேலும் அருந்தமிழின் வழக்கங்கு நிகழாதாக..."

—சம்பந்தர் புராணம், செ. 1026.

இது சம்பந்தர் காலச் செய்தியாகக் கூறப்பட்டுள்ளது. சேக்கிழார் காலத்தும் இஃது உண்மை எனக் கோடலில் தவறு இல்லை என்பது கல்வெட்டுகளால் நன்கறியலாம்.

# V. பாண்டியர் - ஹொய்சளர் காலத்தில் வட எல்லை

## (கி. பி. 1250—1350)

### பாண்டியர் காலம்

கி. பி. 13-ஆம் நூற்றாண்டின் பிற்பாதியில் பாண்டியர் சோழரை அடக்கிப் பேரரசினை நிலை நாட்டினர். அவருள் முதல்வன் ஜடாவர்மன் - சுந்தர பாண்டியன் I. இவன் மூன்றும் இராஜேந்திரன் என்ற சோழ மன்னனை வென்றான்; தமிழகத்திற் செல்வாக்குப் பெற்று வேரூன்றியிருந்த ஹொய்சளரை முறியடித்தான்; இலங்கை அரசனைத் தோற்கடித்தான்; பிறகு தெலுங்கச் சோழன் ஆகிய கண்ட கோபாலனைப் போரிற் கொன்றான்; அவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்த காஞ்சிமா நகரத்தையும் நெல்லூரையும் கைப்பற்றினான்; நெல்லூரில் வீராபிஷேகம் செய்து கொண்டான்; கண்ட கோபாலன் தம்பியர் இவனிடம் அடைக்கலம் புக, அவர்கட்குத் தொண்டை நாட்டை விட்டான. இங்ஙனம் இவன் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாது பேரரசனாக விளங்கியதால், 'எம்மண்டலமும் கொண்டருளிய சுந்தரபாண்டிய தேவர்' என்று வழங்கப்பட்டான்.

இச்சுந்தர பாண்டியன் கல்வெட்டு ஒன்று திருமலை மீதுள்ள கோவிலில் உள்ளது. அதனில் குடவூர் நாடு, தொண்டை பாடி பற்று, அகரப்பற்று இவற்றை, ஆளுங்கணத்தார், பாண்டியன் கட்டளைப்படி யாதவராயர் விட்ட ஓலையை ஏற்றனர். அப்பொழுது அவர்களுடன் வாரிய விமானத்தான் என்ற அதிகாரி இருந்தான். அக்கல்வெட்டில் திருச்சானூர்க் கோவில் 'திரு இளங்கோவில்'

என்று குறிக்கப்பட்டுள்ளது.[1] திருவேங்கடம் உட்பட்ட தொண்டை நாட்டின் வட பகுதி 'வடகாஞ்சி மண்டலம்' என்று இப்பாண்டியன் காலத்தில் வழங்கி வந்தது.[2] திருமலை அடிவாரத்தில் கபில தீர்த்தத்தண்டை உள்ள நம்மாழ்வார் கோவில் அக்காலத்தேதான் கட்டப் பட்டது.[3]

பாண்டியன் ஆட்சிக்கு உட்பட்ட யாதவராயர் கல் வெட்டுகளும் தமிழில் உள்ளன. அவற்றுட் காணப்படும் இடப் பெயர்கள் முதலியன தமிழ்ப் பெயர்களே: பொங் கலூர், இல்லத்தூர் நாடு, திருத்தாயார் காணிக்கை, திருமரு கனூர் காணிக்கை, திருவேங்கட முடையான் (பெருமாள் பெயர்).[4]

## ஹொய்சளர் காலம்

கி. பி. 14-ஆம் நூற்றாண்டின் முற்பாதியில் மாலிக் காபூர் படையெடுப்பு ஏற்பட்டது. அதனால் விந்தமலைக் குத் தெற்கே இருந்த தேவகிரி நாட்டையாண்ட யாதவர், வாரங்கல் நாட்டை ஆண்ட காகதீயர், தேவகிரி நாட்டை யாண்ட ஹொய்சளர் என்பவர் தம்மரசு இழந்தனர்; பாண்டியர் பதவி இழந்தனர். தென்னாடு முழுவதும் குழப்பமுற்றது. ஹொய்சள அரசன் மூன்றாம் வல்லாள மகாராஜன் திருவண்ணாமலையைத் தலைநகராகக் கொண்டு தொண்டை நாட்டையும் சேர்த்து ஆளலாயினன். வட தொண்டை நாட்டை அவன் பிரதிநிதியாகச் சிங்கய்ய தண்ட நாயகன் என்பவன் ஆண்டு வந்தான். அவன் திருமலையிற் செய்த திருப்பணிகள் சில. அவன் பெயர் சில கல்வெட்டுகளில் காண்கின்றன. அக்கல்வெட்டுக்

1. Tirumalai Ins. Vol. I. 43. 2. Ibid. No. 50.
3. Ibid. 57, 58. 4. Ibid. Nos. 99–110.

காலத்திலும் நாட்டின் பெயர்களும் பிறவும் நல்ல தமிழிற்றான் காணப்படுகின்றன. பொங்களூர் - சிங்கய்ய நல்லூர் என்று ஹொய்சள அரசப் பிரதிநிதியின் பெயரால் மாற்றியமைக்கப்பட்டது.[5] வல்லாள தேவர் வரி என்றொரு வரி திருவேங்கட நாட்டில் விதிக்கப்பட்டிருந்தது.[6] வண்சடகோபர் என்ற பெயரால் நந்தவனம் அமைந்திருந்தது.[7] 'சேதிராயன்' என்ற மலர்ப் பல்லக்குச் செய்யப்பட்டிருந்தது.[8] "ஸ்ரீ நாயனூர் யாதவராயர், எர்ரமஞ்சி பெரிய பம்ம நாயகன், 'சேரனை வென்றான்' என்ற பெயர் கொண்ட அழகிய விடுதி, அனந்தாழ்வான் பிள்ளை, பூவை நகர்[9] - காண்க.

ஹொய்சளர் ஆட்சி முடிவெய்தியவுடன் தென்னாட்டில் தோன்றியது விஜயநகரப் பேரரசு ஆகும். அஃது ஏறக்குறையக் கி. பி. 1336-ல் ஏற்பட்டது. அது தென் இந்தியாவில் துங்கபத்திரை யாற்றுக்குத் தெற்கே இந்து அரசினை நிலைபெறச் செய்ய ஏற்பட்டது. அதனால் அதனை உண்டாக்கியவர் தமிழகம் முழுவதையும் கன்னட நாட்டையும் தெலுங்க நாட்டின் ஒரு பகுதியையும் கைப்பற்றினர்; அங்கங்கு இருந்த அரசர்களையே தமக்கு அடங்கி ஆண்டு வருமாறு செய்தனர். விஜய நகர ஆட்சி தென்னாட்டில் ஏறக்குறைய முந்நூறு வருடகாலம் நிலைத்திருந்தது. அந்தக் காலத்தில் தமிழகத்து வடஎல்லை எவ்வாறு இருந்தது என்பதை அடுத்த பகுதியிற் காண்போம்.

---

5. Ibid. No. 102. 6. Ibid. No. 100.
7. Ibid. No. 103 & 104. 8. Ibid. No. 106.
9. Ibid. No. 113, 171, 173, 177.

# VI. விஜயநகர ஆட்சியில் வேங்கடம்
## (கி. பி. 1350 - 1680)

### 1. முதற் பரம்பரை

முதலாம் புக்கராயர் புத்திரரான கம்பண வுடையார் என்பவர் தொண்டை நாட்டையும் சேர-சோழ-பாண்டிய நாடுகளையும் வென்றார்; முதற் குலோத்துங்கனால் மூடப் பட்டுக்கிடந்த காஞ்சி - கயிலாசநாதர் கோவிலைத் திறப் பித்துப் பூசை முதலியன நடைபெற ஏற்பாடு செய்தார். தமிழகத்தில் அமைதி நிலவத் தொடங்கியது. வேங்கடம் மிக்க சிறப்படையத் தொடங்கியது. விஜயநகர ஆட்சி முதற் பகுதியில் பெரும்பாலான கல்வெட்டுகள் தமிழி லேயே வெளியிடப்பட்டன. அக்கல்வெட்டுகளில் காணப் படும் பழைய இடப்பெயர்கள், மக்கட்பெயர்கள், அரசியல் அலுவலாளர் பெயர்கள் முதலியன தமிழிற்றான் காணப் படுகின்றன. அவற்றுட் சில கீழே காண்க:—

1. திருமல்லிநாதன்-சாம்புவராயப் பெருமாள் தானம் செய்தான்.[1]

2. பெருமாளும் தேவியரும் விழாக் காலங்களில் எழுந்தருளும் மண்டபத்தின் பெயர் அழகப்பிரான் என்பது.[2]

3. திருமலையில் உள்ள கோவிற் கணக்கன் எல்லாக் கல்வெட்டுச் செய்திகளையும் பொறிப்பவன். அவன் பெயர் திருநின்றவூர் உடையான் என்பது.[3]

---

1. Tirumalai Ins. Vol. I, No. 182. 2. 184.

3. 184; 'திருநின்றவூர்' இப்பொழுது 'திண்ணனூர்' என்று வழங்குகிறது; சென்னைக்கும் ஆர்க்கோணத்திற்கும் இடையில் இருப்பது; பூசலார் நாயனார் பேறு பெற்ற தலம்.

4. மார்கழி மாதத்தில் திருமலைக்கோவிலில் திருப்பாவை ஓதப்பட்டது.[4]

5. இரண்டாம் தேவராயர் காலத்தில் (கி. பி. 1433-ல்) திருமலையில் வேதபாராயணம் புதியதாக ஏற்படுத்தப்பட்டது. அதனை ஓதுபவர்க்குச் சித்தக்குட்டை என்னும் கிராமத்தின் வருவாயில் ஒரு பகுதி தரப்பட்டது. "திருவேங்கடம் உடையானுக்கு ஸகலமான வைபோகங்களும் உண்டாயிருக்க, வேதாபாராயணம் நடவாதிருந்தபடியாலே" என்பது கல்வெட்டு.[5]

6. சடகோப நம்பி அழகப்பிரானார் கோவிந்தன் கோவில் கண்காணிகளில் ஒருவராவர்.[6]

7. பெரிய மல்லதேவன், ஆழ்வார் முதலியார், உலகுடைய பெருமாள் முதலியார், திரு அனந்தாழ்வார், நாராயணப் பெருமாள் - இவர்கள் திருப்பணிகள் செய்தவர்கள்.[7]

8. திருச்சானூர் சபை உறுப்பினர் ஒருவர் பெயர் வடமாமலைதாசர் என்பது.[8]

9. எம்பெருமானார் ஜீயர் என்பவர் மலைமீதுள்ள பங்கயச்செல்வி என்ற நந்தனவனத்திற்கு உரியவர் அல்லது அங்கு வசித்தவர்; 'கோயில் கேள்வி'க்கு உரியவர்.[9]

10. குறித்த நாட்களில் பெருமாளும் தாயாரும் எழுந்தருளும் ஒரு மண்டபத்தின் பெயர் 'மலைக்கினிய நின்ற பெருமாள்'; அங்கு நம்மாழ்வார் திருவாய்மொழி ஓதப்பட்டது.[10]

11. கி. பி. 1457-ல் உண்டான கல்வெட்டில்,

4. 187. 5. 199-203. 6. 204. 7. 210, 212.
8. 215. 9. 219. 10. 220.

திருப்பதியில் சீனிவாசப் புத்தேரி ஒன்று தோண்டப் பட்டது.[11]

12. சந்திரகிரியை ஆண்ட சாளுவ அரசர் மகன் பெயர் திருமலைதேவன். சாளுவர் விஜயநகரப் பேரரசுக்கு உட்பட்ட சிற்றரசர்.[12]

2. சாளுவர் பரம்பரை

மேற்சொன்ன சந்திரகிரி ராச்சியத்தை ஆண்டுவந்த சாளுவ மரபில் வந்த நரசிங்கர் என்பவர் விஜயநகரப் பேரரசினைக் கைப்பற்றி ஆளத் தொடங்கினார். அவர் விஜயநகரத்தை யாண்ட இரண்டாம் பரம்பரையினர் எனப்பட்டார். அவர் காலத்தில் வேங்கடம் அடைந்த சிறப்பு மிகுதியாகும். எண்ணிறந்த கல்வெட்டுகள் அக் காலத்தில் தோன்றின. அறச் செயல்கள் மிகுதிப்பட்டன; திருப்பதியைச் சுற்றிப் பல கிராமங்கள் கோவிலுக்குத் தேவதானமாக விடப்பட்டன; தரிசான நிலங்களைச் சாகுபடி செய்யப் பல கால்வாய்கள் புதியனவாக வெட்டப்பட்டுப் பெயரிடப்பட்டன. புதிய மண்டபங்கள் பல இடங்களில் கட்டப்பட்டுப் பெயரிடப்பட்டன. புதிய நந்தவனங்கள் உண்டாக்கப்பட்டுப் பெயர் வழங்கப்பட்டன. வைணவத் துறவிகளும் வைணவப் பெரியோர்களும் திருப்பதியில் மிக்கிருந்தனர். கோவில் ஆட்சி செவ்விய முறையில் நடைபெற்றது. புதிய விழாக்கள் பெருகின. இந் நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் குறிக்கப் பல கல்வெட்டுகள் தோன்றின. அவற்றை ஊன்றிப் பார்க்கவேண்டும்: புதியனவாகக் கட்டிய மண்டபங்கள், வெட்டிய கால்வாய்கள், உண்டாக்கப்பட்ட நந்தவனங்கள் முதலியவற்றுக்கு எல்லாம் வைக்கப்பட்ட பெயர்

11. Vol. II, 3. 12. History of Tiruppati, Vol. 1, p. 457.

கள் தூய தமிழ்ப் பெயர்களே என்பது அறியத்தக்க உண்மையாகும். ஊர்ப் பெயர்கள், ஏரி - குளப் பெயர்கள் முன்போலத் தமிழிலேயே இருந்துவந்தன. திருப்பதியில் அப்பொழுது இருந்த தெருப் பெயர்கள் பல தமிழ்ப் பெயர்களே. இந்த உண்மையைப் பின்வரும் கல்வெட்டுச் செய்திகளால் அறிக:

1. சந்திரகிரி ராச்சிய வைகுந்த வளநாடு.

2. திருப்பதியில் இருந்த இராமாநுஜ கூடத்து மேற்பார்வையாளர் - அழகிய மணவாள ஜீயர் என்பவர் மாணவர் கந்தாடை இராமாநுஜ ஐயன்.[1]

3. சாளுக்கிய நாராயணச் சேரி........கோவிலுக்குச் சொந்தமான கிராமம் கோற்றமங்கலம்.........வேறொரு கிராமம் தண்டலம்.[2]

4. வேங்கடக் கோட்டத்துள் சிறுபாடி என்பது ஒரு கிராமம்........பெரிய மல்லைய தேவன்........திருமால் பெயர் திருவேங்கடம் உடையான்.[3]

5. வேங்கட நாட்டுள் இளமண்டியம், தூக்கிப் பாக்கம் என்பனவும் சந்திரிகிரி ராச்சியத்தில் ஏலம்பாக்கம் என்பதும் கிராமங்கள்; முதல் இரண்டும் தேவதான கிராமங்கள்.[4]

6. பாடி என்பது ஒரு கிராமம்.........படைவீடு ராச்சியம் தொண்டை நாட்டது.[5]

7. மலைமீது 'முழங்கால் முறிப்பான்' என்ற இடத்தில் மண்டபம் கட்டப்பட்டது. மாவண்டூர் என்பதை அடுத்திருப்பது ஆதித்யன் பள்ளி என்னும் கிராமம். அங்கு வெட்டப்பட்டது கசக்கால்.[6]

---

1. Thirumalai Ins. Vol. II. 4. 2. No. 16.
3. 17, 18. 4. 4, 18. 5. 21. 6. 23, 25.

8. வேங்கடக் கோட்டத்தில் பானகம், மலையக் கோன்பட்டு, தணிகை நாட்டுக் குறுக்கம்பட்டு, சந்திரகிரி ராச்சியத்து நாராயணபுரப் பற்று;[7] வஞ்சிப்பாக்கம், மல்லி மலை, சேருலக்கூர் என்பன சந்திரகிரி ராச்சியத்துக் கீழ்ப் படை நாட்டுக் கிராமங்கள்; 'வாளால் மண் கொண்டான்' என்ற கிராமமும் தொம்மரப்பட்டி என்ற கிராமமும் படை வீடு சீமையைச் சேர்ந்தவை.[8]

9. திருக்கோனேரி, ஸ்ரீ கோனேரி என்பன குளங்கள். 'அப்பப் படி' என்பது அப்பம் செய்து படைக்கத் தந்த தருமம்.[9]

10. கிராம வருவாய்களின் பெயர்கள் தமிழிலேயே காணப்படுகின்றன. அவை: (1) கார், (2) கோடை, (3) கடமை, (4) பொன்வரி. இவை: (1) கார்நெல் வரி, (2) கோடை நெல்வரி, (3) அரசாங்கத்துக்குத் தரும் நிலவரி, (4) நாணய வகையிற் செலுத்தப்படும் பிற வரிகள் ஆகும்.[10]

11. சாளுவ அரசர் காலத்தில் திருமலையில் கோவில் காரியங்களைக் கவனித்து வந்த பெரியார் நாதமுனிகள் பரம்பரையினர். அவர் சொட்டைத் திருவேங்கட தாத ஐயங்கார் மகனார் குமார தாத ஐயங்கார்.[11] இவர்கள் மரபினர் ஒருவரை இராமானுஜர் திருமலையிற் கொணர்ந்து குடியேற்றினார்.[12]

12. திருமலையில் அறப்பணி செய்தவர்கள் - சிறு திம்மராஜ உடையார், அவர் தமையனார் பெரிய திம்மராஜர்[13].

---

7. 27, 28, 31. 8. 34, 50. 9. 50.
10. 50 & 53. 11. 58, 59.
12. History of Tiruppati, Vol. II, P. 14. 13. 91.

13. வேங்கடத்தை அடுத்துள்ள சிற்றூர்களில் சிறுபாடி, திருவேங்கட நல்லூர், திரமனேரி (திரையனேரி, தேவதான கிராமம்), பூண்டி (தேவதான கிராமம்), வேட்டுவக் குளத்துறையைச் சேர்ந்த புதுச்சேரி (தேவதான கிராமம்) என்பன சில.[14]

14. கோவிந்தராஜப் பெருமானுக்குப் பாடிவேட்டை என்ற விழா நடைபெற்றது. அனந்தான் பிள்ளை என்பது ஒரு மண்டபத்தின் பெயர். திருமழிசைப்பிரான் என்பதும் ஒரு மண்டபத்தின் பெயர். மலைமீது தோப்புத் திருநாள் நடைபெற்றது. ஒரு மடத்தின் பெயர் பங்கயச்செல்வி என்பது.[15]

15. திருமலையில் இருந்த உத்யோகஸ்தன் பெயர் திருவேங்கட சிறுக்கன் திருப்பணிப்பிள்ளை எம்பெருமானுர் என்பது. இவன் காலம் கி. பி. 1504.[16]

16. திருப்பதியில் இருந்த பெண்களுள் வேங்கடவல்லி என்பவள் ஒருத்தி. திருவேங்கடநாதன் நந்தவனக் காப்பாளர் பெயர் பெரிய பெருமாள் ஜீயர் என்பது. நரசிங்க சாளுவரிடம் இருந்த நடன ஆசிரியன் 'நட்டுவன்' என்று குறிக்கப்பட்டான். திருச்சுகனூர் (திருச்சானூர்) என்பதற்கு அண்மையில் முன்னைப்பூண்டி என்றொரு கிராமம் இருந்தது.[17]

17. சந்திரகிரி ராச்சியத்துச் சாத்தக்குடித் தலைவனை மாணிக்க நாயனுர் மகன் கோனேரி என்பவன் திருமலை - கோயிலுக்குத் தருமம் செய்தான்; அதே ஊரைச் சேர்ந்த உலகளந்த தேவன் என்பவனும் திருப்பணி செய்தான். சாத்தக்குடி மருதூர் என்னும் ஊரைச் சேர்ந்த

---

14. 93, 103, 126. 15. 97, 103, 113, 103.
16. 138. 17. 5, 7, 10.

பெரிய கோபாலன், சின்னன், காரி, சிறு கோபாலன் முதலி யோர் திருப்பணி செய்தனர்; 'சாளுக்கிய நாராயணன் மரக்கால்' என்பது நெய் அளந்த அளவைப் பெயர்[18].

18. பேரூரிலிருந்து திருப்பதிக்குக் கால்வாய் வெட்ட ஏற்பாடாயிற்று. பெரிய மண்டியம் என்ற கிரா மத்திலிருந்தும் கோற்ற மங்கலம் என்ற கிராமத்திலிருந் தும் கால்வாய்கள் வெட்டப்பட்டன. மலர்களைப் பறிக்கவும் மாலை கட்டவும் சாத்தாத வைணவர் திருமலை யில் இருந்தனர். கலிதீர மங்கலம் என்பது ஒரு சிற்றூர். தேவதான கிராமம் ஒன்றைச் செழுமையாக்க உடையவர் கால்வாய் என்று ஒன்று வெட்டப்பட்டது[19].

19. திருப்பதியில் சிங்கர் கோயில் தெரு இருந்தது. சொக்கர் கோடி என்பது ஒரு பகுதியின் பெயர். மேட்டு மடம் தெரு என்பது ஒரு தெருப்பெயர்[20].

20. திருமங்கையாழ்வார் கோவிலில் (திருப்பதி யில்) பள்ளிகொண்டான் என்ற மண்டபம் இருந்தது. சடகோபதாசர் நரசிம்மராய முதலியார் என்பவர் திருப் பதியில் இருந்த சிறந்த ஸ்ரீ வைணவர். திருப்பதியி லிருந்த இராமாநுஜ கூடத்தை மேற்பார்வை பார்த்தவர் கந்தாடை இராமாநுஜ ஐயன் என்பவர். மலைக்கினிய நின்றான் என்பது ஒரு நந்தவனத்தின் பெயர். கோனே ரிக் கரையில் உள்ள வராஹப்பெருமான் ஞானப்பிரான் என்று வழங்கப்பட்டார்[21].

21. பெரிய பெருமாள் தாசர் என்பவர் 'பின் சென்ற வில்லி' என்ற நந்தவனத்தின் உரிமையாளர். மலைமீ துள்ள அம்மன் பெயர் அலர்மேல் மங்கை என்பது. திரு

18. 12, 19. 24, 26, 38-39, 43, 57.
20. 48, 110, 114. 21. 49, 66, 68.

அத்யயன விழாவில் இயற்பா தொடங்கி இராமாநுஜர் நூற்றந்தாதி வரை எல்லாப் பாக்களையும் திவ்யப் பிரபந்தத்திலிருந்து 22 நாள் ஓத ஏற்பாடு செய்யப்பட்டது. மார்கழியில் திருப்பள்ளி எழுச்சி பாட அதிக மானியம் விடப்பட்டது[22].

22. பரித்தி புத்தூர் என்னும் ஊரிலிருந்து வாய்க்கால் வெட்டப்பட்டது. மன்னூர் பிள்ளை, அப்பா பிள்ளை என்ற சகோதரர் கோவிலுக்குத் தருமம் செய்தனர். 'நரசய்யன் கால்' வெட்டப்பட்டது. பாசிண்டி வேங்கடத்து உறைவார் என்ற இராமானுஜ ஐயனை ஜீயர் ஒருவர் திருப்பதியில் இருந்தார்[23].

23. திருச்சானூர்ச் சபை உறுப்பினர் பெயர்கள் (1) அரவணைப் பெருமாள் தாசர் இளையபெருமாள் அப்பையன், (2) அரையரங்கதாசர் ஆண்ட பெருமாள் சொக்கண்ணன், இவர் தமையன் பெயர் மலையண்ணன் என்பது, (3) அஸ்திகிரி நாதர் (பெரிய பெருமாள் தாசர் மகன்), (4) அழகப்பிரான் என்பன.[24]

24. நந்தவனத்தின் பெயர் பேரருளாளர் என்பது. நரசிங்கசாளுவர் பொன்மேய்ந்த பெருமாள் எனப்பட்டார். பிள்ளை திருப்பணி பண்டாரம் என்பவர் கோவில் திருப்பணிகட்குரிய பணத்தைப் பாதுகாப்பவர். சந்தை, மகமை, குத்தகை, பொன், பணம், குழி (நில அளவை) என்னும் தமிழ்ச் சொற்கள் வழக்கில் இருந்தன. எல்லா மாதங்களின் தமிழ்ப் பெயர்களும் வழங்கி வந்தன.[25]

25. சித்தூர் ஜில்லாவில் உள்ள சிற்றூர் சிறு கார் வேட்டை எனப்பட்டது. ஒரு கால்வாய் 'இராமாநுஜன்

---

22. 69, 83-84, 86. 23. 88, 95.
24. 96, 105, 110. 25. 106, 115, 131, 133.

கால்வாய்' என்ற பெயருடன் புதிதாக வெட்டப்பட்டது. மலை அடியிலிருந்து மேல் செல்லும் வழியில் கட்டப்பட்ட மண்டபங்கள் பல புதிய பெயர்களைப் பெற்றன. அடிவார மண்டபம் நாவலூர் மண்டபம் எனப்பட்டது. கந்தாடை இராமாநுஜ ஐயன்மீது பாடப்பட்ட தமிழ் உலா நூல் ஒன்று பெருமாள் முன்னிலையில் ஓத ஏற்பாடு (கி. பி. 1496-ல்) நடந்தது. படைவீடு ராச்சியத்தைச் சேர்ந்த கல்வைப் பற்றுக்கு உட்பட்ட கடப்பேரி கிராமத்தில் இருந்த நிலங்கள் சில பெருமாளுக்குத் தானம் செய்யப் பட்டன.[26]

26. திருக்குடலூர் நாட்டுக் கூடலூர் என்ற கிராமம் தேவதானமாக விடப்பட்டது. பெருமாள் சக்கரம் திரு ஆழி ஆழ்வான் எனப்பட்டது.[27]

## மூன்றாம் பரம்பரை

### கிருஷ்ணதேவராயர் காலம் (கி. பி. 1509—1530)

நரசிங்க சாளுவர்க்குப்பின் அவரது சேனைத் தலைவரான நரச நாயக்கர் விஜய நகரத்தை ஆளலானார். அவருக்குப்பின் ஆண்டவருள் அவரது கருத்தைக் கவர்ந்த கிருஷ்ணதேவராயரே சிறந்தவர். அவர் காலத்தில் திருப்பதி அடைந்த சிறப்புகள் பலவாகும். தமிழகத்தில் விஜய நகர ஆட்சி ஏற்பட்டதால் தெலுங்கரும் கன்னடரும் தொண்டை நாட்டிலும் கொங்கு நாட்டிலும் பல அரசியல் வேலைகளில் அமர்ந்து குடியேறினர். அவர்களைப் பின்பற்றி வியாபாரிகளும் பிறரும் குடியேறினர். சோழ - பாண்டிய நாடுகளில் விஜய நகர அரசர்களால்

---

26. 134, 135, 136. 27. Tirumalai Ins. Vol. III, No. 1, 10.

அனுப்பப்பட்ட சேனை வீரரும் சேனைத் தலைவர்களும் அரசியல் அலுவலாளரும் குடியேறினர். ஆதலின் தமிழ கத்தில் தெலுங்கும் கன்னடமும் தலை காட்டின; சிறப் பாகத் தமிழகத்தின் வட எல்லைப்புறமான வேங்கடப் பகுதியிலும் கருநாடகத்தைச் சார்ந்த (கொங்கு நாட்டு) எல்லைப் பகுதியிலும் முறையே தெலுங்கும் கன்னடமும் ஓரளவு பரவின. இந்தக் காரணத்தாற்றான் திருப்பதியில் விஜய நகர ஆட்சியில் தெலுங்குக் கல்வெட்டுகளும் கன்னடக் கல்வெட்டுகளும் சில காணப்படுகின்றன. ஆயி னும் தமிழ்க் கல்வெட்டுகளே அதிகமாகும். வேங்கடம் தமிழகத்தைச் சேர்ந்த தென்பதே அதற்குரிய காரண மாகும்.

1. திருமலைக் கோவில் மூன்றும் பிராகாரத்தில் உள்ள கோபுரத்தின் பெயர் பாடிகாவல் கோபுரம் என்பது. கிருஷ்ணதேவராயர் மனைவி சின்னுதேவி, கோவிலுக்குத் தொண்டை மண்டலத்துக் குடியூர் என்ற கிராமத்தைத் தேவதானமாக விட்டாள். மற்றொரு மனைவியான திரு மலா தேவி என்பவள் சோழ சிங்க புர நாட்டைச் (சோளிங்கர்) சேர்ந்த பிராட்டி குளத்தூர் என்ற சிற்றூரைத் தேவதானமாக விட்டாள்.[1]

2. படை வீடு ராச்சியத்து - முருகமங்கலம் பற்றைச் சேர்ந்த ஆரணிச் சீர்மையில் உள்ள வீரகம்ப நல்லூர் என்ற கிராமம் திருமலைக் கோவிலுக்கு தானமாக விடப் பட்டது.[2]

3. பெரிய ஓபல நாய்க்கர் புலுஹூர் நாட்டுச் சித்த வோலு சீர்மையில் உள்ள சங்கொடிப் பல்லி என்ற

1. History of Tiruppati, Vol. II, pp. 111-113.
2. Tirumalai Ins. Vol. III, 18.

கிராமத்தைத் தானமாக விட்டார். திருமலை நாய்க்கன் தன் பெயரால் ஒரு மண்டபம் கட்டினுன். கொண்டவாளி சீர்மையைச் சேர்ந்த தீவலைப் பூண்டி கிராமம் தானமாக விடப்பட்டது.[3]

4. மலைமீதிருந்த ஒரு நந்த வனத்தின் பெயர் திரு ஆழி பரப்பினுன் திருநந்தவனம். அதன் பார்வையாளர் பெயர் திருவேங்கட ஐயன் என்பது. 'திரு ஆழி பரப்பினுன்' என்பது ஒரு மடத்திற்கும் பெயராக இருந்தது. குன்றவர்த்தனக் கோட்டத்து - நின்றை நாட்டு - நாகலாபுரமான அரிகண்டபுரத்து வடமலை அண்ணகள் என்பவர் கோவிற்குத் தானம் செய்தார்.[4]

5. மணியக் கோன் பட்டு, கட்டளைப்பட்டு, நெல்வாய், கோல்லிமேம்பை என்பன தேவதான கிராமங்கள் - இவை வட தொண்டை நாட்டைச் சேர்ந்தவை. திருமணி சீர்மையைச் சேர்ந்த முரந்தை என்ற கிராமம் தேவதானமாக விடப்பட்டது. திருப்பதியில் இருந்த குளம் ஒன்று தொண்டைமானுர் எனப் பெயர் (கி. பி. 1517-ல்) பெற்றிருந்தது. உதயகிரி ராச்சியத்து நெல்லூர்ச் சீர்மையைச் சேர்ந்தது முழும் பூண்டி என்ற கிராமம். நாகலாபுரம் கோவில் ஆட்சியாரில் ஒருவர் திருவேங்கடப் பெருமாள் முதலியார் என்பவர். அவர் தகப்பனுர் திருநகரி அவிதிகளப்பாள திருவேங்கட உடையான் என்பவர்.[5]

6. கி. பி. 1520-ல் 1630 குழி நிலம் 'திருமலா தேவிபுரம்' எனப் பெயரிடப்பட்டுத் தேவதானமாக விடப்பட்டது. இவ்வாறு விடப்பட்ட சர்வமான்ய கிராமங்கள்

3. 25, 27, 90. 4. 97, 103.
5. 105, 109, 116, 118, 130, 136.

"பண்டார வாடை* கிராமங்கள்' என்று பெயரிடப் பட்டன.[6]

7. துய்யா நாட்டுப் புல்லாலைப் பட்டு வேளாளர் அறம் செய்தனர். திருச்சானூர்ச் சபை உறுப்பினர் ஒருவரது பெயர் விலைகடந்த தாசர் அண்ணு ஐயங்கார் மகனுன ஸ்ரீ இராமையன் என்பது. கிருஷ்ணதேவராயர் காலத்திலும் திருவாய்மொழி முதலிய தமிழ்ப் பிரபந்தங்கள் தொடர்ந்து ஓதப்பட்டு வந்தன.[7]

கிருஷ்ணதேவ ராயர் திருக்காளத்தி நாதரைத் தரிசித்து அவருக்கு மானியமாக விட்ட சற்றுப்புற கிராமங்கள் - போனகை நாட்டுப் புலியூர், கமலை நாட்டுத் தென்பாக்கம், கரும்பேடு, சாத்தம் பையூர், மாடநல்லூர்ச் சீமையைச் சேர்ந்த தும்மூர் என்பன. 'தும்மூர்' என்பது பண்டைக் காலத்தில் 'தும்பையூர்' எனப்பட்டது. அங்குள்ள கோவிற் பெருமாள் பெயர் கருமாணிக்கப் பெருமாள் எனப்பட்டது. அக்கோவிலில் நம்பிமார் மூவர் இருந்து பூசை செய்தனர். †

அச்சுதராயர் காலம் (கி. பி. 1530—1542)

இவர் காலத்திலும் திருமலையிலும் திருப்பதியிலும் இருந்த மடங்கள், நந்தவனங்கள், கோவில்கள் யாவும் முன் போலவே தமிழர் ஆதிக்கத்திற்றுன் இருந்தன என்பதை எண்ணிறந்த கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன. சில அளவைப் பெயர், நாணயங்களின் பெயர்

---

*'பண்டார வாடை' என்று தஞ்சாவூருக்கு அருகில் ஓர் ஊர் உள்ளது. அதுவும் இவ்வாறு தேவதான ஊராக இருந்து இப்பெயர் பெற்றது போலும்!

6. 142. 7. 167, 172, 178.

† Nellore Ins. Vol. 111, Tummur Ins. 11, 12, 17.

கள், ஏரிகளின் பெயர்கள், ஊர்களின் பெயர்கள், விழாக்களின் பெயர்கள் - யாவும் முன்போலவே தமிழில் இருந்து வந்தன.

1. திருக்கொடித் திருநாள்....அடைப்பம் எம்பெருமானார் அடியார் (கோவில் தாசிகள்)....மலைமீது மேலைச் சன்னிதித் தெருவில் புதிதாக அமைக்கப்பட்டது அங்கண திருவீதி-அச்சுதராயர் மனைவி பெயர் வரதாஜி அம்மன் அவர்கள்.[8]

2. திருமலை மீதும் திருப்பதியிலும் இராமாநுஜ கூடங்கள் இருந்தன. அங்கு வைணவ யாத்ரிகர்க்கு உணவு படைக்கப்பட்டது. அவற்றை மேற் பார்வை பார்த்த முதல்வர் கந்தாடை இராமநுஜ ஐயங்கார்; அவருக்குப் பின் வந்தவர் கந்தாடை மாதவ ஐயங்கார்; அவருக்குப் பிற்பட்டவர் குமார இராமாநுஜ ஐயங்கார்.[9]

3. தல்லபாக்கம் திருமலை ஐயங்கார் என்பவர் கோவிலில் பிரபந்தம் ஓதிக்கொண்டிருந்த பெரியார்.[10]

4. அச்சுதராயர் திருமலைக் கோவிலுக்குத் தெலுங்கு நாட்டுத் தேவரடியார் இருவரை அனுப்பினார். அவர்கள் (1) உத்து குப்பாயி மகள் குப்பாசானி என்பவள்; (2) ஹநுமாசானி என்பவள். லிங்காசானி என்பவள் வேறொருத்தி; மற்றொருத்தி திருவேங்கடமாணிக்கம். இவள் 'எம்பெருமான் அடியாள்' திப்பாசானி மகள். இவர்கள் தெலுங்கர்; தெலுங்கப் பெயர்களை உடையவர்கள் ஆயினும் 'எம்பெருமான் அடியார்' என்று தமிழிலேயே வழங்கப்பட்டமை காண்க.[11]

---

8. Vol. IV, 54, 58. 9. Vol. IV, No. 1.

10. No. 6. 'பாக்கம்'— கடற்கரை அடுத்த சிற்றூர். இப்பெயர் கொண்ட ஊர்கள் தொண்டை மண்டலத்தில் மிகுதி.

11. 11, 21.

5. தெலுங்கப் பெருமக்கள் செய்த அறங்களும் தமிழில் பொறிக்கப்பட்டன ; அவற்றில் தமிழ் வழக்குச் சொற்களே மிகுதியும் பயில்கின்றன. சிறிய படிகள் வழியாக ஏறும் இடத்தில் தண்ணீர்ப் பந்தர்க்கு ஒரு மண்டபம் மஹா மண்டலேசர் திம்மராஜ சலகராஜரால் கட்டப்பட்டது. "சிற்றேற்றத் தண்டை மண்டபம் கட்டப்பட்டது."[12]

6. தமிழ்ச் சொற்களும் தெலுங்கப் பெயர்களும் கலந்து வழங்கின. இந்நிலை தமிழக எல்லையான திருப்பதியில் மிகுதியாகக் காணப்பட்டது. சலகராஜ பெரிய திருமலை தேவராஜர் மனைவி பெரிய கொம்மம்மன்........ சிறு திம்மையன்.......பண்டாரம் அப்பரசன்........ஊழியம் எல்லப்ப நாயக்கன்................பெரிய திருமல(லை)ராஜன் திருமலை ஜோஸ்யர் மகன் வேங்கடாத்ரி ஐயன்........... ஆசார்ய கோவில் கந்தாடை அண்ணன்........[13]

7. தொண்டை நாட்டில் உள்ள பாதிரிகுப்பம், புதுப்பாக்கம், கிழங்குன்றம், குப்பம் என்பன தேவதான கிராமங்கள்.[14]

8. பங்கயச் செல்வி (நந்தவனத்தின் பெயர்)க்கு உரிய வடவேங்கட ஜீயர்க்கு ஆசாரியர் திருவாய்மொழி திருமலை நாயனார் என்பவர். அவர் பிறந்தநாள் விழாவிற்குத் தானம் கொடுக்கப்பட்டது........யமுனைத் துறைவர் மண்டபம் என்பது ஒன்று............அடைப்பம் பையப்ப நாயகர்........தொண்டை மண்டலத்தின் உட்பகுதி உள் மண்டலம் அதற்கு அப்பாற்பட்டது புற மண்டலம்........ கோவில் கணக்கன் பெயர் பெரியசோலை என்பது........ தெய்வநாயகன் மடம் ஒன்று இருந்தது........கருணாகர

12. 25. 13. 31, 36, 38, 66, 115. 14. 32, 130, 155.

பட்டன் மகன் மலைநின்றான் பெருமாள் கோவில் பூசை செய்பவன்........ஏகாங்கி பேரம்பல ஐயன் என்பவர் திருவேங்கடநாதன் திருநந்தவனத்தை மேற்பார்த்தவர்........ கோவிலில் இயற்பா (நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தின் ஒரு பகுதி) ஓதப்பட்டது.[15]

சதாசிவராயர் காலம் (கி. பி. 1542—1565)

விஜயநகர ஆட்சியில் தொண்டை மண்டலம் தெலுங்கர்க்கு இடம் தந்ததென்பதை முன்னர்க் குறித்தோம் அல்லவா? திருப்பதியின் சிறப்பு வடக்கே மிகுதியாக அறியப்படவே, தெலுங்கரும் அரசாங்க உத்யோகஸ்தராக இருந்த தெலுங்கப் பெருமக்களும் சிற்றரசரும் திருப்பதியில் திருப்பணிகள் பல செய்யலாயினர். இது சதாசிவ ராயர் ஆட்சியில் மிகுதிப்பட்டது என்பதை அவர் காலக் கல்வெட்டுகளைக் கொண்டு நன்கு அறியலாம். அக் கல்வெட்டுகளில் பழைய தமிழகத்துக் கோட்டங்கள், நாடுகள், ஊர்கள் இவற்றின் பெயர்கள் முன்போலப் பழையனவாகவே இருக்கின்றன. கோவில் தொடர்பான பழைய பெயர்களும் அப்படியே காண்கின்றன. கோவில் ஆட்சியும் மடங்களின் ஆட்சியும் நந்தவனங்கள் முதலியவற்றின் பாதுகாப்பும் முன்போலத் தமிழ் மக்கள் இடமே இருந்துவந்தன.

சதாசிவராயர் காலக் கல்வெட்டுகளில் காணப்படும் தமிழ்நாட்டு - ஊர் - மக்கள் - பிற கட்டடங்கள் - பொருள்கள் இவற்றின் தமிழ்ப் பெயர்களிற் சில இங்குக் காண்க :

1. திருமலைக் கோவில் கணக்கன் பெயர் - தேவர் வணங்க வருவார் வேங்கடத்து அரசு என்பது............

---

15. 46, 110, 112, 127, 134, 138, 156, 175.

திம்மய்யன் மகள் கிருஷ்ண மாங்கை என்பவள் 100 பணம் தானம் செய்தாள்........துங்கச் செல்வி திம்மி என்பவள் மகளான சண்பக வெங்கு என்பவள் திருப்பதியில் இருந்த நடனமாது........[1]

2. திருமலைக்கே உரிய பழைய குடிகள் வேட்டுவர் அல்லவா? அவர்கள் திருப்பணியாக ஒரு மண்டபம் கட்டப்பட்டது. அதன் பெயர் 'திருவேட்டுவர்' என்பது. 'எல்லி' என்பான் மகள் திருமகள் என்பவள் தருமம் செய்தாள்.........[2]

3. மேலடை நாட்டுக் கோமக்கரை சீமையில் உள்ள பேரூர் வருவாய் கோவிலுக்கு அளிக்கப்பட்டது. வில்லிகள் (வேடர்) ஒரு மண்டபம் கட்டினர்........நகரிச் சீமையில் உள்ள பள்ளிப்பட்டும் அஞ்சூர் நாட்டுக் குண்டிப் பூண்டியும் தேவதானமாக விடப்பட்ட கிராமங்கள்........[3]

4. படைவீடு ராச்சியத்து - பல்குன்றக் கோட்டத்து- மெய்யூர் நாட்டு - கலவைப்பற்றில் உள்ள சகதுவாச் சேரியைச் சேர்ந்த தேசூர் என்னும் கிராமமும் ..................
சந்திரகிரி ராச்சியத்து - குன்றவர்த்தனக் கோட்டத்து - தணிகை நாட்டு - சகதுவாச் சேரியைச் சேர்ந்த விலஞ்சி நேறு என்னும் கிராமமும் தேவதான கிராமங்கள்[4]. இதிலிருந்து - பழைய கோட்டம் - நாடு - பற்று - சேரி -

---

1. Tirumalai Ins. Vol. V. No. 5, 40-41.
(தமிழ்ப் பெயர்களும் பிற சொற்களும் தெலுங்கர் பெயர்களில் கலந்து உறழ்தல் காண்க.)

2. 70; புல்லி என்பவன் வேங்கடமலைத் தலைவன், கள்வர் (வேடர்) தலைவன் என்பது சங்க நூல்களால் அறிகிறோம். இவ் எல்லி அத்தகையவன் போலும்!

3. 75, 78, 122.   4. 129.

ஊர் என்னும் பழைய தமிழ்ப் பெயர்கள் அழியாமல் சதாசிவராயர் காலம்வரை இருந்து வந்தமை அறியலாம்.

5. ஜயங்கொண்ட சோழ மண்டலத்து (தொண்டைநாட்டு - படைவீடு ராச்சியத்து - பல்குன்றக் கோட்டத்து - இராஜகம்பீர ராச்சியத்து - கண்ட கோபாலன் பற்றைச் சேர்ந்த தச்சூர் நாட்டுத் தச்சூர் வருவாயில் 80 ரேகை பொன் தானமாக்கப்பட்டது.[5]

6. திருப்பதியைச் சுற்றியுள்ள 16 நாட்டுப்பிரிவுகள் குறிக்கப்பட்டுள்ள கல்வெட்டு ஒன்று. அப்பிரிவுகள் தொண்டைமண்டலப் பிரிவுகளே ஆகும்; இரண்டொன்று புறம்பானவை.[6]

சதாசிவராயர்க்குப் பின்னர் (கி. பி. 1565—1680).

சதாசிவராயர்க்குப் பின்வந்த அரசர்கள் கோல்கொண்டா, பிஜப்பூர்ச் சுல்தான்களால் தாக்குண்டு துன்புற்றார்கள். விஜயநகரப் பேரரசு பல பகுதிகளாகப் பிரிந்தது. எனினும் பெயரளவில் பேரரசு ஏறத்தாழக் கி. பி. 1680 வரை இருந்து வந்தது. அப்பொழுது வேங்கடத்துக்கும் துங்கபத்திரைக்கும் கிருஷ்ணைக்கும் இடைப்பட்ட பகுதியை ஆண்டுவந்த போத்தப்பிச் சோழர், உறையூர்ச் சோழர், தேவசோழர் என்ற சோழ மரபைச் சேர்ந்த (ஆனால் தெலுங்கராக மாறிவிட்ட) மரபினர் வேங்கடம், காளத்தி என்ற இடங்களில் செல்வாக்குப் பெற்றனர். விஜயநகர அழிவுக்குப் பிறகு தெலுங்கரும் கருநாடகரும் பலராகப் பாதுகாப்பு நோக்கித் தொண்டைநாட்டிற் குடியேறினர். விஜயநகர அரசர் பெனுகொண்டா, சந்திரகிரி இவற்றில் இருந்து அரசாளத்

5. 138. 6. 154.

தொடங்கினர். இக்காரணங்களால் வட தொண்டை நாட்டில் தெலுங்கு மொழி பரவலாயிற்று; தெலுங்கர் பலராகத் தொண்டை நாட்டிற் குடியேறத் தொடங்கினர். ஆயினும், அக்காலத்தில் தோன்றிய கல்வெட்டுகளை ஆராயின், தெலுங்கர் திருப்பணிகள் சிலவாகவே இருத்தல் காணலாம்.

அக்காலக் கல்வெட்டுகளிலும் முன் சொன்னவாறே நில அளவைப் பெயர் - நாணயங்களின் பெயர்கள் முதலியன தமிழிலேயே இருந்தன. அப்பெயர்கள் எல்லோரது ஆட்சியிலும் இருந்துவந்தது என்பது கல்வெட்டுகளால் அறியப்படும்.

1. பாலவேடு சீமையில் உள்ள ஐயண்பாக்கம், புலிவாய் என்ற கிராமங்களின் வருவாய் கோவிலுக்கு அளிக்கப்பட்டது. இவை தொண்டை நாட்டுக் கிராமங்கள்.[1]

2. பாளையம் சீர்மையைச் சேர்ந்த பூந்தமல்லி அகரம் கோவிலுக்கு விடப்பட்டது............தம்பி செட்டி மகன் சிலம்படியார் செட்டி திருப்பதியில் வாழ்ந்தவன்; பெரிய ராஜவீதியில் ஒரு மண்டபம் கட்டினான். இராஜன் ஏரியைப் புதுப்பித்தனர்............கோவில் மேற்பார்வையாளர் பெயர் வண்சடகோப அழகிய மணவாள அண்ணன் இராமாநுஜ ஜீயர்........187 ரேகை பொன்னும் 5 பணமும்[2]........

3. திருவேங்கடம் உடையானை நாடோறும் திருமலையில் தொழுதுவந்த பக்தருள் ஒருவன் நோட்டக்காரன் (மதிப்பிடுபவன்) வேங்கடையன் என்பவன்; அவன்

---

1. Vol. VI, No. 5. 2. 9, 10, 12, 18, 22.

(ரேகை - பொன் - பணம் என்பவை நாணயங்களின் பெயர்கள்: இவை தமிழ்ப் பெயர்களாதல் காண்க.)

மகன் நோட்டக்கார நாராயணையன் எனப்பட்டான். இரண்டிடங்களில் 'நோட்டக்காரன்' என்னும் தமிழ்ச் சொல் வருதல் காண்க; பொருள்களை - நிலங்களை மதிப்பிடும் உத்யோகஸ்தன் என்பது பொருள்.[3]

ஏறத்தாழக் கி. பி. 1680-உடன் விஜயநகர ஆட்சி மறைந்தொழிந்தது. அதுகாறும் தமிழகத்தின் வட எல்லையில் உள்ள திருப்பதி — தமிழ்நாட்டுப் பகுதியாகவும் தமிழ் ஊராகவும் தமிழர் வாழ்விடமாகவும் தமிழ் ஆசாரியர் ஆட்சிக்கு உட்பட்ட கோவிலைக் கொண்டதாகவும் - நடைமுறை வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாப் பொருள்களும் தமிழ்ப் பெயர்களைக் கொண்ட நிலையிலும் இருந்துவந்தது என்னும் உண்மையை இதுகாறும் உணர்த்திய கல்வெட்டுச் சான்றுகளைக் கொண்டு நன்கு உணரலாம்.

இலக்கியச் சான்று

(1) விஜயநகர ஆட்சிக்காலப் பிற்பகுதியில் வாழ்ந்த பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் என்ற வைணவப் பெரும் புலவர்,

"ஆழ்வார்கள் செந்தமிழை ஆதரித்த வேங்கடம்என்
தாழ்வான புன்சொல்லும தாங்குமால்;—ஏழ்பாரும்
வெல்லும் கதிர்மணியும் வெம்பாலும் செஞ்சாந்தும்
புல்லும் பொறுத்தமையே போல்."

என்று பாடியிருத்தல் கவனிக்கத் தக்கது. இஃது அவர் காலத்திலும் வேங்கடம் தமிழகத்தது என்பதையும் தமிழ்ப் பாக்கள் ஏற்கத் தக்க இடம் என்பதையும் நன்கு புலப்படுத்துகின்றது அன்றோ?

(2) இந்த விஜயநகர ஆட்சியின் பிற்பகுதியில் மதுரையை ஆண்ட திருமலை நாயக்கர் காலத்து (கி. பி. 1623—1659) வாழ்ந்த படிக்காசுப்புலவர்,

3. 20.

"நாடான கோட்டம் இருபத்து நான்கினுள் நற்றண்டகத்(து)
ஆடாத செக்கும் அரையாத அம்மியும் ஆகிவளர்
பீடாதி பீடத் திருக்காமக் கோட்டம் பிறங்குகச்சி
மாடா திபரெனும் காலாண்ட ரும்தொண்டை மண்டலமே."

என்று பாடியிருத்தலால், அவர் காலத்திலும் தொண்டை மண்டலம் - 24 கோட்டங்களை உடையது என்ற பழைய கொள்கை நிலைத்திருந்தது என்பது நன்கு வலியுறுத்தப்படுதல் காண்க.

(3) " Leaving the Andhra and Karnataka regions, the two Gandharvas proceed to places which the Sanskrit poet Venkatadhvarin (17th C A. D.) definitely considers as falling out of the boundaries of the Andhra desa, that is, places belonging to Dravida desa, which is described next. *The first Tamil region* which the two Gandharvas describe *is Venkatagiri or Tiruppati.*"*

முடிவுரை

விஜயநகர ஆட்சிக்குப் பின் கோல்கொண்டா அரசு தென்னாட்டைக் கவர்ந்தது; மஹாராஷ்டிரர் குட்டி அரசுகளை அங்கங்கே ஏற்படுத்தினர்; மதுரையிலும் தஞ்சையிலும் இருந்த நாயக்க அரசுகள் வலி இழந்தன; ஆங்கிலக் கம்பெனியார் இதன் நாட்டில் கீழ்க் கரையில் இடம் பெற்று வேரூன்றினர்; இத்தகைய குழப்ப காலத்தில் வேங்கடம் சிறப்பாகப் பொது மக்கள் கவனத்தைக் கவரவில்லை. பின்னர் ஆங்கில ஆட்சி ஏற்பட்டது. அதன் பின்னரே வேங்கடம் சமயத் துறையில் முன்போலச் சிறப்புறலாயிற்று. எனினும், விஜயநகர ஆட்சிக் காலத்தில் இருந்த பழைய நாட்டுப் பெயர்கள்-ஊர்ப் பெயர்கள் முதலியவற்றில் பல கல்வெட்டளவில் நின்றுவிட்டன; ஆட்சி மாறுபாட்டினால் தொண்டை மண்டலம் எனப்பட்ட நிலப்பகுதி நெல்லூர், சித்தூர், வட ஆர்க்காடு,

* Dr. V. Raghavan's article in the Madras Tercentenary Commemoration Vol. p. 107.

செங்கற்பட்டு, தென்னார்க்காடு என்னும் ஜில்லாக்களாகக் காட்சி அளிக்கிறது. வட ஆர்க்காடு, செங்கற்பட்டு, சித்தூர் ஜில்லாக்களும் நெல்லூர், தென் ஆர்க்காடு ஜில்லாக்களில் சில பகுதிகளும் சேர்ந்த நிலப் பகுதியே பழைய தொண்டைநாடு ஆகும்.

சங்க காலம் முதல் விஜயநகர ஆட்சிக்காலம் முடிய உள்ள இலக்கிய - கல்வெட்டுச் சான்றுகளை நோக்க, வேங்கடம் தமிழகத்தது என்பதும், தமிழர் வாழ்ந்த பதி என்பதும், தமிழ் வைணவ ஆசாரியர் ஆதிக்கம் பெற்றிருந்த ஸ்தலம் என்பதும், பிற்காலச் சோழ - விஜயநகர ஆட்சிக் காலங்களிற்றான் தெலுங்கர் தெற்கு நோக்கிக் குடியேறத் தொடங்கியதும் தெலுங்கர் கவனத்தைத் திருப்பதி இழுத்தது என்பதும், விஜயநகர வரலாற்று இறுதிக்காலம வரை வேங்கடம் தமிழ் நாட்டினது என்றே அக்கால மக்களால் கருதப்பட்டு வந்தது என்பதும் ஐயமற அறிந்து கொள்ளலாம்.

"திருமலை, திருப்பதி, திருச்சானூர் முதலிய மூன்று பெருந் தலங்களிலும் கி. பி. 9-ஆம் நூற்றாண்டு தொடங்கிப் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை அகப்பட்டுள்ள கல்வெட்டுகள் 1060 என்றும், அவற்றில் 50-ல் குறைந்தவை தெலுங்கிலும் கன்னடத்திலும் சம்ஸ்கிருதத்திலும் உள்ளன என்னும் அவை தாமும் அங்குள்ள தமிழ்க் கல்வெட்டுகளின் பிரதிகளேயாம் என்பதும் அச் சிலாசாஸன வெளியீட்டால் அறியலாம். விஜயநகர மன்னர்கள் வேற்று மொழியாளராய்த் தமிழ்நாட்டின் பகுதியை ஆண்ட காலத்திலும் அவர் தெலுங்கு மொழிக் கல்வெட்டுகள் இன்றித் தமிழ் மொழியிலேயே கல்வெட்டுகள் உள்ளன என்றால், அவர்கள் காலத்தில் தெலுங்கு மக்கள் இந்நாட்டுள் பலராக வாழவில்லை என்பது தெளிவான செய்தி அல்லவா ?"*

---

* T. P. Palaniappa Pillai's article, Lokopakari, pp. 20-21. (dated 10-1-48).

# VII. சென்னை நகரம்

தென் பெண்ணைக்கும் வட பெண்ணைக்கும் இடைப்பட்ட இடம் தொண்டை மண்டலம் என்பதை மெய்ப்பித்த பிறகு, அம்மண்டலத்தின் இடையில் அமைந்துள்ள சென்னை நகரம் தொண்டை நாட்டினது - தமிழகத்தைச் சேர்ந்தது என்று கூறவும் வேண்டுமோ? சென்னை தொண்டை நாட்டது ஆயின், எந்தக் கோட்டத்தைச் சேர்ந்தது? இது நல்ல கேள்வியே. கி. பி. 1647-ல் எழுதப்பட்ட பத்திரம் ஒன்றில், "தொண்டை மண்டலத்துப் புழல் கோட்டத்து - ஞாயிறு நாட்டு-சென்னபட்டினம்" என்பது காணப்படுகிறது.[1]

இதனால் சென்ன பட்டினம் என்பது வெள்ளையர் வந்து சென்னையில் தங்குவதற்கு முன்னரே இருந்த நகரம் என்பது தெரிகிறது.

சென்னபட்டினம் என்பது இப்பொழுது உயா நீதி மன்றம் உள்ள இடத்தில் இருந்த நகரமாகும். அங்குச் சென்ன கேசவப் பெருமாள் கோவில் இருந்தது. வெள்ளையர் வேரூன்றத் தொடங்கியதும் அக்கோவில் இடிக்கப்பட்டது; இன்றுள்ள தங்கசாலைத் தெருவில் புதிதாகக் கட்டப்பட்டது. 'சென்ன கேசவப் பட்டினம்' என்பது 'சென்ன பட்டினம்' என மருவி வழங்கலாயிற்று.[2]

## மயிலாப்பூர்

இன்று சென்னையின் ஒரு பகுதியாகவுள்ள மயிலாப்பூர் தாலமி காலத்தில் (கி. பி. முதல் இரண்டு நூற்றாண்டு

1. Madras Tercentenary Commemoration Volume, pp. 361-362.

2. Ibid. P. 112. 'சன்னப்பன்' பெயரால் 'சன்னப் பட்டினம்' என்றாயிற்று என்பாரும் உளர். Ibid. P. 42.

களில்) சிறந்த துறைமுகப் பட்டினமாக இருந்தது என்பது தெரிகிறது. அவர் அதனை 'மயிலார்பன்' (தமிழ் - மயிலார்ப்பு) எனக் குறித்துள்ளார்.[3] ஏறக்குறையக் கி. மு. முதல் நூற்றாண்டினரான திருவள்ளுவர் மயிலாப்பூரினர் என்பது வரலாறு.* முதல் மூன்று ஆழ்வார்களில் ஒருவரான பேயாழ்வார் மயிலாப்பூரிற் பிறந்தவர். அவருக்கென ஒரு கோவிலும் மயிலாப்பூரில் இருக்கின்றது. கி. பி. 7-ஆம் நூற்றாண்டினரான சம்பந்தர் மயிலாப்பூர்ச் சிவன் கோவிலைத் தரிசித்துப் பதிகம் பாடினார்.[4] கி. பி. 9-ஆம் நூற்றாண்டினனான நந்திவர்மன் என்ற பல்லவன் 'மயிலை காவலன்' என்று கூறப்பட்டான்.[5] சோழர் காலத்தில் திருமயிலைக் கோவில் மிக்க சிறப்புற்றது. திருமயிலை என்னும் பழைய நகரத்தின் பெரும் பகுதி கடலுக்கு இரையானது; அதன் எஞ்சிய பகுதி கோல் கொண்டா அரசர் ஆணையால் அழிக்கப்பட்டது.[6] மயிலாப்பூர் புலியூர்க் கோட்டத்தைச் சேர்ந்தது. †

## திரு அல்லிக் கேணி

இது மயிலாப்பூருடன் இணைத்தே கூறப்பட்டு வந்தது. இது சிறந்த வைணவத் தலமாகும். பேயாழ்வாரும்

---

3. Ibid. P. 41. * Ibid. P. 355.

4. "மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டம் கொண்டான் கபாலீச் சுரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்(கு)
அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்!"
—சம்பந்தர் தேவாரம்.

5. நந்திக் கலம்பகம்.

6. Madras T. C. Volume, p. 25. † 455 of 1906.

திருமங்கை யாழ்வாரும் இத்தலத்தைப் பாடியிருக்கின்றனர். கி. பி. 8-ஆம் நூற்றாண்டிற்கு முன்னரே இத்தலத்துக் கோவில் சிறப்புற்றிருந்தது என்பது பல்லவர் (தந்திவர்மன்) காலத்துக் கல்வெட்டினால் அறியலாம்.[7] இத்தலம் வரவரச் சிறப்புற்று வந்தது. அக்காலத்து அல்லிக் குளம் இக்காலத்தில் புதிய கட்டடங்களைக் கொண்ட இடமாக மாறிவிட்டது.

பிற இடங்கள்

நுங்கம்பாக்கம், எழுமூர் இவ்விரண்டும் கி. பி. 11-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளன. நுங்கம்பாக்கம் பழைய சிவன் கோவிலும் எழுமூர் தெள்ளி சிங்க நாயனார் கோவிலும் பழையவை. தங்கசாலைத் தெரு முனையில் ஒரு கோவில் இருந்தது. அதனில் பார்த்திவேந்திர கரிகாலன் என்ற சோழன் காலத்துக் (கி. பி. 10-ஆம் நூற்றாண்டு) கல்வெட்டு இருந்தது. அதன் உடைந்த பகுதி சென்னைப் பொருட் காட்சிச் சாலையில் வைக்கப்பட்டுள்ளது.[8] புழல் கோட்டத்தில் 'எழுமூர் நாடு' என்பது பெரியது. அதன் தலை நகரம் எழுமூர். 'சேற்றுப் பட்டு' எழுமூர் நாட்டைச் சேர்ந்தது[9]. மாம்பலம் என்பது சைதாப் பேட்டை வரை பரவியிருந்த கிராமம் ஆகும்.[10] பிரம்பூர், அயனபுரம்[11] ஆகிய இரண்டும் கி. பி. 17-ஆம் நூற்றாண்டு வடமொழி நூலிற் குறிக்கப்பட்டுள்ளன.[12] வில்லிவாக்கம் பழைய காலத்தில் 'வில்லி பாக்கம்' எனப்பட்டது. அது 'புழல்

7. Epi graphia Indica, Vol. 8, p. 291.

8. Madras T. C. Volume, p. 365. 9. Ibid, p. 136.

10. Ibid. p. 124. 11. ஐயனவரம். 12. Ibid. p. 109.

கோட்டத்து — அம்பத்தூர் நாட்டு — வில்லி பாக்கம்" எனப்பட்டது.* வேப்பேரி, புரசைப் பாக்கம், புதுப் பாக்கம் என்பன கிழக்கிந்தியக் கம்பெனியார் வருகைக்கு முன்பே இருந்த சிற்றூர்கள் என்பது அவர்கள் எழுதி வைத்த குறிப்புகளால் தெரிய வருகிறது.[13] இவ்வாறே முத்தியாலுப் பேட்டை, பெத்த நாயக்கன் பேட்டை என்னும் பகுதிகளும் பழையவையே ஆகும்.[14] தொண்டையார்ப் பேட்டையும் பழையதேயாகும்.[15]

## சிற்றூர்கள்

மயிலாப்பூரைச் சேர்ந்திருந்த பழைய கிராமங்கள்–பல்லாவரம், நன்மங்கலம், ஆலந்தூர், நந்தம்பாக்கம், மாம்பலம் முதலியன. திருவொற்றியூரைச் சேர்ந்த கிராமங்கள்—சாத்தங் குடி, சடையன் குப்பம், எலந்தஞ் சேரி, எர்ணூர், கத்திப்பாக்கம் முதலியன. இவை அனைத்தும் பண்டைச் சிற்றூர்களே ஆகும். எழும்பூரைச் சேர்ந்த பழைய கிராமங்கள் — புரசைப்பாக்கம், புதுப் பாக்கம், வேப்பேரி, கீழ்ப்பாக்கம், சேற்றுப்பட்டு, அமைந்தகரை, நுங்கம்பாக்கம், ரோசணப்பாக்கம்†, அகரம் முதலியனவாகும். இவை யாவும் வெள்ளையரால் விலை கொடுத்து வாங்கப்பட்ட பழைய சிற்றூர்கள்.[16]

---

*M.E.R. 1913, No. 99. 13. M.T.C.V. p. 296, (foot-note).
14. Ibid. pp. 299, 363. 15. Ibid. p. 301.

† இது சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிக்கும் செங்கற்பட்டுக் கலெக்டர் அலுவலகத்துக்கும் இடையில் இருந்த சிற்றூர்.

16. Ibid. p. 303 (foot-note 30.)

திருவொற்றியூர்

இது கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் சைவசமய ஆசிரியர் ஆகிய அப்பர்[17] - சம்பந்தரால் பாடப்பெற்ற சிறப்புடையது; கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் சுந்தரர் சங்கிலியாரைத் திருமணம் செய்துகொண்ட ஊராகும். திருவொற்றியூர்க்கு அண்மையில் உள்ள 'ஞாயிறு' என்னும் சிற்றூரைச் சேர்ந்த வேளாளப் பெண்மணியாராகிய சங்கிலியார் திருவொற்றியூர்க் கோவிலில் திருத்தொண்டு செய்துவந்தார். இவ்வூர் சுந்தரராலும் பாடப்பெற்ற சிறப்புடையது.[18] கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் சதுரானன பண்டிதர் என்பவர் தலைமையில் சிறந்த மடம் ஒன்று சமயத்தொண்டு செய்துவந்தது.[19] கி. பி. 10-ஆம் நூற்றாண்டினரான பட்டினத்தடிகள் இத்தலத்திற்றான் அடைக்கலமானார். பிற்காலச் சோழர் காலத்தில் திருவொற்றியூர் மிகச்சிறந்த சிவத்தலமாகக் கருதப்பட்டது; புலியூர்க் கோட்டத்தைச் சேர்ந்தது†. நூற்றுக்கு மேற்பட்ட கல்வெட்டுகள் இங்குள்ள சிவன்கோவிற் சுவர்

---

17. "வேலைக் கடல்நஞ்சம் உண்டுவெள் ளேற்றேடும் வீற்றிருந்த
மாலைச் சடையார்க் குறைவிட மாவது வாரிகுன்றா
ஆலைக் கரும்பொடு செந்நெற் கழனி அருகணைந்த
சோலைத் திருவொற்றி யூரைஎப் போதுந் தொழுமின்களே."

—அப்பர் தேவாரம்

18. "பாட்டுப் பாடிப் பரவித் திரிவார்
ஈட்டும் வினைகள் தீர்ப்பார் கோயில்
காட்டுங் கலமும் திமிலும் கரைக்கே
ஓட்டுந் திரைவாய் ஒற்றி யூரே,"

—சுந்தரர் தேவாரம்

19. 351 of 1908; 158, 159, 161 of 1912.
† 366 - 372 of 1912.

களில் இருந்து அத்தலத்தின் பழமையைக் குறிக்கின்றன.

விஜயநகர ஆட்சி

விஜயநகர ஆட்சியிறுதிக் காலத்தில் காஞ்சிபுரத்தை அடுத்த 'தாமல்' என்னும் ஊரைத் தலைநகராகக் கொண்டு கர்நாடக நாட்டை விஜயநகரச் சார்பில் சிற்றரசர் ஒருவர் ஆண்டுவந்தார். அவர் மரபில் வந்து, கி. பி. 1639-ல் சென்னையில் வாணிகத்திற்காக வெள்ளையர்க்கு இடம் தந்தவர் - தாமல் (தாமர்ல) வேங்கடப்ப நாயக்கர் என்பவர். அவரது பிரதிநிதியாக அவருக்கு அடங்கிய பாளையப்பட்டுக்காரர் ஒருவர் பூவிருந்தவல்லியில் இருந்தார். அவரே சென்னையை மேற்பார்த்து வந்தார்.[20] சோழப் பேரரசு வீழ்ச்சி யடைந்த பிறகு தொண்டைநாடு கி. பி. 14-ஆம் நூற்றாண்டில் விஜயநகர ஆட்சிக்கு உட்பட்டது; அது முதல் கி. பி. 17-ஆம் நூற்றாண்டுவரை அவர்களிடமே இருந்தது. இது வரலாறு கூறும் உண்மை. அஃதாவது, சென்னை ஏறத்தாழ 300 வருடகாலம் விஜயநகர ஆட்சிக்கு உட்பட்டு இருந்தது என்னலாம்; அதன் பிறகு கர்நாடக நவாப் ஆட்சிக்கும் பிறகு வெள்ளையர் ஆட்சிக்கும் மாறிவிட்டது. ஆயின், சென்னையை உள்ளிட்ட தொண்டைநாடு வரலாற்றுக் காலம் தொடங்கிக் கி. பி. 1300 வரை தமிழர் ஆட்சியில் இருந்த தமிழ்நாட்டுப் பகுதி என்பதை மறந்துவிடலாகாது.



20. M. T. C. Volume, pp. 39,42.

# VIII. தமிழர் கடமை

## இதுகாறும் கண்ட உண்மைகள்

சங்ககால முதல் வெள்ளையர் ஆட்சி ஏற்படும்வரை வேங்கடமே (திருப்பதியே) தமிழகத்தின் வட எல்லையாக இருந்தது - தொண்டை நாடு வேங்கடம், காளத்தி, கூடூர் இவற்றைத் தன் அகத்தே பெற்றிருந்தது - தொண்டை நாடு சங்ககால முதல் வெள்ளையர் ஆட்சிவரை தமிழ் நாடாகவே இருந்துவந்தது என்பதை இலக்கியம், வரலாறு, கல்வெட்டு இவற்றைக் கொண்டு அறியலாம் - தொண்டை நாட்டின் 24 கோட்டங்களும் அவற்றில் அடங்கிய ஊர்களும் தமிழ்ப் பெயர்களாகவே இருந்தன - விஜயநகர ஆட்சிக் காலத்தில் சில ஊர்ப்பெயர்கள் புதிய பெயர்களைப் பெற்றன (ஆட்சி மாறுபாட்டால் ஊர்ப் பெயர்கள் மாறுதல் அடைதல் யாண்டும் வழக்கமே ஆகும்) — விஜயநகர ஆட்சியின்போது தெலுங்கு வட தொண்டை நாட்டில் ஓரளவு பரவத் தொடங்கியது. தெலுங்கர் வடதொண்டை நாட்டில் குடியேறி நிலைக்கலாயினர். ஆதலின் தெலுங்கக் கல்வெட்டுகள் சில வட தொண்டைநாட்டில் காணப்படுகின்றன-என்பனபோன்ற பல உண்மைகள் முன்சொன்ன பகுதிகளிலிருந்து எளிதில் அறியத் தக்கவையாகும்.

## வட எல்லையில் மாற்றம்

வட பெண்ணையாறு முதலில் தமிழகத்தின் வட எல்லையாக இருந்தது - பின், வேங்கடம் - காளத்தி என்பன வட எல்லை இடங்களாகக் குறிக்கப்பட்டன. நெல்லூர் ஜில்லாவின் தென்பகுதி-பையூர் இளங் கோட்டமாக

இருந்தது - பின்னர்த் தெலுங்கச் சோழர் ஆட்சியில் பையப்பைய மாறலாயிற்று - அதனால் தமிழ்க் கல்வெட்டுகளும் தெலுங்கக் கல்வெட்டுகளும் சில கோவில்களில் விரவிக் காண்கின்றன - நாளடைவில் ஊர்கட்கிருந்த தமிழ்ப் பெயர்கள் தெலுங்கப் பெயர்களாக மாறி வழங்கலாயின என்பனபோன்ற செய்திகளை நடுவு நிலையிலிருந்து இந்நூலைப் படிப்பவர் அறிந்துகொள்ளலாம்.

## தென் நெல்லூர் - சித்தூர் ஜில்லாக்கள்

இந்த ஜில்லாக்கள் தொண்டை நாட்டைச் சேர்ந்தவை என்பது பல சான்றுகள் கொண்டு நிறுவப்பட்டது. மேலும் உண்மை அறிய அவாவுவோர் இந்த ஜில்லாக்களில் உள்ள பழைய கோவிற் கல்வெட்டுகளைப் படித்து உண்மையை உணரலாம். 'பல நூற்றாண்டுகளாக இந்த ஜில்லாக்கள் தொண்டை நாட்டினவே' என்பதைக் கல்வெட்டுகள் நடுவு நிலையினின்று நமக்கு இன்றளவும் உணர்த்தி நிற்கின்றன. 'நெல்லூர் ஜில்லாக் கல் வெட்டுகள் - மூன்று பாகங்கள்' வெளியாகியுள்ளன. அவற்றில் பண்டைக்காலக் கல்வெட்டுகள் யாவை? அவை எம்மொழியில் உள்ளன? ஊர்ப்பெயர்கள் எம்மொழியில் விளங்கின? அவ்வூர்களில் இருந்த மக்கள் யாவர்? அவ்வூர்க் கடவுளர் - திருப்பணி செய்தவர் - கோவில் பணியாளர் - இவர் தம் பெயர்கள் எம்மொழியில் இருந்தன?' என்பனபோன்ற கேள்விகளை எழுப்பி, அவற்றுக்கு விடைகளை முன்னரே கண்டோம்.

'தென் நெல்லூர், சித்தூர் ஜில்லாக்களில் வழங்கும் தெலுங்கு தூயதன்று - தமிழ் கலந்த தெலுங்கு' என்று கோதாவரி, கிருஷ்ணை ஜில்லாக்களில் உள்ள தெலுங்கர்

இன்றளவும் குறை கூறுதற்கும் இந்த இரண்டு ஜில்லா மக்களையும் மாற்றுந்தாய் மக்களைப்போலக் கருதுதற்கும் உரிய காரணம் யாது? நெல்லூர் - சித்தூர் ஜில்லாக்கள் பல நூற்றாண்டுகளாகத் தமிழ் நாட்டுப் பகுதிகளாக இருந்து, அண்மையில் தெலுங்கர் குடியேற்றத்திற்கு ஆளானமையே காரணம் ஆகும். இந்த இரண்டு ஜில்லாக்களும் தமிழகத்தின் வட எல்லைப்புறப் பகுதி ஆதலின், தமிழும் தெலுங்கும் விரவியுள்ள - தமிழரும் தெலுங்கரும் கலந்துள்ள பகுதியாக இருக்கின்றது. அதனால் இப்பகுதியில் தூய தமிழ் வழக்கும் இல்லை; தூய தெலுங்கு வழக்கும் இல்லை. உண்மைத் தமிழ் நாட்டுப் பகுதி நாளடைவில் இம்மாறுபாடு உற்றதற்குத் தென் இந்திய வரலாறே காரணமாகும்.

## ஒரு தாய் ஈன்ற மக்கள்

பழைய தமிழிலிருந்து தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் முதலிய பல மொழிகள் பிரிந்து நாளடைவில் வேறு மொழிகளாக மாறின என்பது ஒரு சார் மொழி ஆராய்ச்சியாளர் கூற்று. தமிழ் தெலுங்கு - கன்னடம் - மலையாளம் என்பன மிகப் பழைய திராவிடமொழி ஒன்றிலிருந்து பிரிந்தவை என்பது பிறிதொருசார் ஆராய்ச்சியாளர் முடிபு. உண்மை எதுவாயினும், 'தமிழ் - தெலுங்கு' ஆகியவை ஓர் இன மொழிகள் என்பதை அனைவரும் ஒப்புகின்றனர். அஃது உண்மையாயின், இந்த இரண்டு மொழிகளைப் பேசும் மக்களும் ஓர் இனத்தவர் என்பது உண்மையாகும்.

## மண்ணாசை ஒழிக

ஆகவே, இருதிறத்தாரும் ஒத்த அன்பும் நல்லெண்ணமும் உடையாராக இருந்து - அடுத்தடுத்த இடங்

களில் நிலைத்து நின்று - வாழவேண்டுபவர் ஆவர். ஆதலின் இவர்கட்குள் 'பிறர் மண்' கவரவேண்டும் என்னும் ஆசை இருத்தல் நன்றன்று. மண்ணாசையால் மடிந்த மாகாணங்கள் பல; அழிந்த அரசுகள் பல; ஒழிந்த பேரரசுகள் பல இஃது உலக வரலாறு உரைக்கின்ற உண்மை.

வரலாறு - இலக்கியம் - கல்வெட்டுச் சான்றுகளைக் கொண்டே நாட்டு எல்லைகள் வகுக்கப்படல் வேண்டும். இம்முறை தவறி, ஆள்பலம் கொண்டோ அன்றித் தோள் பலம் காட்டியோ அல்லது பிறவாறோ தங்கட்குச் சாதகமாக மாகாணப் பிரிவினையை ஒரு சாரார் அமைப்பாராயின், இரு மாகாணத்தார்க்கும் என்றும் அமைதி உண்டாகாது. அதன் விளைவாக என்றும் அல்லலே ஆட்சி பெறும். எல்லைப் பிரிவினையும் மண்ணாசையுமே ஐரோப்பிய வல்லரசுகளை அழித்து வருகின்றன என்பதைக் கண்முன்னர்க் காண்கின்றோம் என்பதைத் தமிழரும் தெலுங்கரும் அறிந்து, நேர்மையான முறையில் நடந்துகொள்ளக் கடமைப்பட்டவராவர்.

## இன்றைய தேவை யாது?

1. இலக்கியம் - வரலாறு - கல்வெட்டு இவற்றுக்கு மதிப்பீந்து உண்மை வழியில் மாகாணப் பிரிவினை வேண்டும் என்று நினைப்பின், வடபெண்ணையாறே தமிழ் மாகாணத்தின் வட எல்லையாக அமைதல் வேண்டும். இதுவே இயற்கை வழிப்பட்ட பிரிவினையாகும். நெல்லூர் தமிழ் மாகாணத்தின் வடமுனை நகரமாகத் திகழ்தல் வேண்டும்.' இன்றேல்,

2. வேங்கடம் - காளத்தி ஆகிய இரண்டையும் தமிழ் மாகாண வடகோடி நகரங்களாக அமைக்கும் முறையில் தமிழ் மாகாணம் பிரிக்கப்படல் வேண்டும்.

இந்த இரண்டாம் குறிப்புப்படி தமிழ் அறிஞர் இசைதல்—அவர்களது விட்டுக் கொடுக்கும் பெருந் தன்மையையும் தம் இனத்தவராகிய தெலுங்கரிடம் கொண்டுள்ள உடன் பிறப்புப் பற்றையும், என்றும் நிலையுள்ள அமைதியை அவாவும் அருங்குணத்தையும் காட்டும் அறிகுறியாக நல்லறிஞரால் நன்கு மதிக்கப்படும்.

## திருவேங்கடமும் திருக்காளத்தியும்

பல நூற்றாண்டுகளாகத் தமிழர் தம் உயிரினும் மேலாகக் கருதிப் போற்றி வந்த - போற்றி வருகின்ற திருவேங்கடத்தையும் திருக்காளத்தியையும் தமிழர் பிறர் கையில் விடுதல் தம்முயிரை விட்டுவிடுதல் போலாகும். சங்கத் தமிழ்ப் புலவர்களால் வட எல்லை எனப் பாராட்டப்பட்டு ஆழ்வார்களால் ஏத்தெடுக்கப் பெற்ற வேங்கடமும்,* சைவசமயப் பெரியாராகிய திருக்கண்ணப்பர், திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரர் இவர்களால் போற்றப்பட்ட திருக்காளத்தியும் தமிழகத்தின் இரண்டு கண்கள் ஆகும்; வைணவ - சைவ சமயங்களின் உயிர் நிலை ஆகும். இவற்றைப் பெற முயல்வதே தமிழர் கடமையாகும். இந்த இரிடங்களையும் தன்னகத்தே பெறும் தமிழ் மாகாணத்தைத் தமிழ் மக்கட்கு அருளுமாறு - வேங்கடத்தில் நின்ற திருக் கோலத்தில் உள்ள நெடியோனையும் "மாகமார் திருக்காளத்தி மலையெழு கொழுந்தாய் உள்ள ஏக நாயகனை"யும் இறைஞ்சுகின்றோம்.



---

* 'திருமலை - திருப்பதி தேவஸ்தானம்' என்னும் வழக்கு இன்றும் இருந்துவருதல் காண்க.

## பிற்சேர்க்கை

## I. கடப்பை ஜில்லா

கடப்பை ஜில்லாவில் காணப்படும் பழைய கல்வெட்டுகள் எல்லாம் தமிழ்க் கல்வெட்டுகளாகவே உள்ளன. ஊர்ப்பெயர்கள் - கடவுளர் பெயர்கள் அனைத்தும் இன்றும் அடியோடு மாறிக் காண்கின்றன. இங்கு மாதிரிக்காகச் சிலவற்றைக் காண்க:—

1. நந்தலூரு—அதிராச மண்டலத்து மேல் பாக்கை நாட்டு நிரந்தனூர்; சிவன் பெயர் - சொக்கப் பெருமாள் 614 of 1908.

2. குண்டலூரு — பொத்தப்பி நாட்டுக் குண்டலூர்- 620 of 1908.

3. ஒபலி — தெலுங்கில் ஒபிலி என்பது பழைய பெயர். 'ஒப்பிலி' என்பது தமிழ்ப் பெயராக இருந்தது போலும்; 438 of 1912. சிவன் பெயர் - மலைக்கின்ற பெருமாள்.

4. அத்திராலா — அதிராச மண்டலத்துமேல் பாக்கை நாட்டுத் திரு அறத்துறை; சிவன் - திருவிராமேசுவரம் உடையார். இதில் உள்ள 9 கல்வெட்டுகளில் தமிழ் 7; தெலுங்கு 2-ம் காலத்தாற் பிற்பட்டவை. அவற்றில் 'அறத்துறை' என்ற தமிழ்ப் பெயர் முறையே 'அறது ரேவுல' என்றும், பின்னர் 'அரது ரேவுலு' என்றும் வழங்கப்பட்டன. பின்னது சிதைந்து இன்று 'அத்திராலா' எனப்படுகிறது. தமிழ்ப்பெயர் மாறி வழங்கும் விந்தையைக் காண்க. 398 - 406 of 1912.

5. போலி — அதிராச........மேல்பாக்கை நாட்டுப் புடோலி; சிவன் பெயர் - உள்ளம் குழைந்த நாயனார்; பெருமாள் பெயர் - கருமாணிக்கப் பெருமாள், இப்பெயர் 15-ஆம் நூற்றாண்டுத் தெலுங்கக் கல்வெட்டில் 'கரிய மாணிக்கராய' என்று காணப்படுகிறது. 407 - 410 of 1912.

6. லேபாக—அதிராச........மேல்பாக்கை........நேன் பாக்கம் ; சிவன் பெயர் - கரவீசுவரமுடைய நாயனார் ; மற்றொரு பெயர் - திருச்சிற்றம்பல முடையார் நென் பாக்கம் என்ற தமிழ்ப் பெயர் 'லேம்பாக' என்று தெலுங்கக் கல்வெட்டில் உள்ளது. இதுவே இன்று 'லேபாக' என்று மருவி வழங்குகிறது. 18 கல்வெட்டுகளில் தமிழ் 14 ; தெலுங்கு 4. 413 - 431 of 1912.

## II. சென்னைக்கு வடக்கில்

1. இராமகிரி — இது 'ஜயங் ........ மண்டலத்து - குன்றவர்த்தனக் கோட்டத்து - நின்றையூர் நாட்டு - நடுவுமலை' எனப்பட்டது. சிவன் பெயர் - திருக்காரிகறை யுடைய நாயனார் - இதில் உள்ள கல்வெட்டுகள் 32 ; எல் லாம் தமிழ்க் கல்வெட்டுகள். 630 - 661 of 1905.

2. திருத்தணி — இது 'ஜயங்........குன்றவர்த்தனக் கோட்டத்து - தணிகை நாட்டுத் - திருத்தணியல் எனப் பட்டது. இங்கு 22 கல்வெட்டுகள் உள. தமிழ் 18, தெலுங்கு 2, வடமொழியும் தெலுங்கும் கலந்தவை 2. விசயநகர அரசர்கள் காலக் கல் வெட்டுகளும் தமிழிலே இருக்கின்றன. 429 - 451 of 1906.

3. நாகலாபுரம் — இங்குள்ள கோவிலே 15-ஆம் நூற்றாண்டிற்றான் கட்டப்பட்டது. அதனில் உள்ள கல் வெட்டுகள் 10 ; அவற்றுள் தமிழ் 6, கன்னடம் 2, வட மொழி 2, தெலுங்கு இல்லை. 619-629 of 1905.

4. கார்ட்டேர் (பொன்னேரி தாலூகா) — ஜயங் ......... யையூர்க் கோட்டத்து .......255 of 1913.

5. மல்லம் (கூடூர்த்தாலூகா) — ஜயங்........யையூர் இளங்கோட்டத்துத் திருவான்பூர்........Nellore Ins. I. p. 430.

இவற்றை விரிப்பிற் பெருகும். உண்மை உணர்ந்து அறவழியில் நடத்தலே வேண்டற்பாலது.



## BIBLIOGRAPHY

ENGLISH :

1. South Indian Inscriptions, Vols. 3, 12.
2. " —by Rangachari.
3. Epigraphia Indica, Vol. 8.
4. Indian Antiquarry, Vol. 14.
5. Annual Reports on Epigraphy, 1896–1930.
6. Tiruppati Devasthanam Ins. Vols. I to VI.
7. Nellore Inscriptions, Vols. I to III
8. Journal of the Bombay University (1936).
9. " Sri Venkatesvara Oriental Institute, Tiruppati.
10. History of Tiruppati, Vols. I & II—Dr. S. K. Aiyangar.
11. The Madras Tercentenary Commemoration Volume (1939).
12. Ancient Geography of India — Cunningham.
13. Early History of India — V. A. Smith.
14. Asoka — "
15. Cholas — K. A. N. Sastry.
16. Pallavas of Kanchi — R. Gopalan.
17. Manimekalai in its Historical Setting —Dr. S. K. Aiyangar.
18. A Survey of Indian History—K. M. Panikkar.

TAMIL :

19. தொல்காப்பியம்
20. அகநானூறு
21. புறநானூறு
22. பத்துப்பாட்டு
23. சிலப்பதிகாரம்
24. திருமுறைகள் 1—7
25. நாலாயிர திவ்வியப் பிரபந்தம்
26. நந்திக் கலம்பகம்
27. வீர சோழியம்
28. பெரிய புராணம்
29. நன்னூல்
30. அஷ்டப்பிரபந்தம்
31. தொண்டை மண்டல சதகம்

